உ

குருவே துணை

வண்ணச்சரபம் – அருள்மிகு.

# தண்டபாணி சுவாமிகள் வரலாறு





## நினைவு விழா மலர்

திருவாமாத்தூர்

ரசபை வெளியீடு.

1964.

திருவாமாத்தூர் கௌமாரசபை வெளியீடு—70

உ
குருவே துணை






மகான் — வண்ணச்சரபம்

# அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்
# வரலாற்றுச் சுருக்கம்

ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் நினைவு விழா
சென்னை ஏவிஎம் ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில்
குரோதிஞு, ஐப்பசிமீ, 16உ (1-11-'64)
ஞாயிறன்று நடைபெற்றபோது
திருமுருக. கிருபானந்தவாரியார் சுவாமிகள்
அவர்களால் வெளியிடப்பெற்றது.

தொகுத்தவர் :

ஷை சுவாமிகள் பௌத்திரர்
திரு. தி. செ. முருகதாச ஐயா அவர்கள்
கௌமாரமடாலயம்,
திருவாமாத்தூர், விழுப்புரம் P.O.

1—11—1964.

# அணிந்துரை

“ஞானமலது கதி கூடுமோ?” என்கிறார் தாயுமானார். ஞானந்தான், துன்ப நீக்கத்திற்கும், இன்ப ஆக்கத்திற்கும் காரணம்.

ஞானிகள் “இன்பமே எந்நாளும் துன்பமில்லை” என்பார்கள்.

ஞானமே உருவாய தெய்வம் முருகவேள். “ஞானந் தான் உருவாகிய நாயகன் இயல்பை, யானும் நீயுமா இசைத்தும்” என்றால் அஃது எளிதோ என்கிறான் அறிஞரில் மேலோனாகிய சிங்கமுகன்.

ஞான நாயகனை அடைந்தால் முத்திப் பேறு எளிது. “முருகன் தனிவேல் முனி நம் குருவென்று அருள் கொண் டறியார் அறியும் தரமோ?” என்பது அநுபூதி.



இத்தகைய ஞான பண்டிதனைக் குருவாகப் பெற்று, பெருந்தவ நெறியில் நின்று, பல்லாயிரம் பனுவல்களை வழங் கிய பரம குருநாதர் வண்ணச்சரபம் ஸ்ரீமத் தண்டபாணி சுவாமிகள். அவர்களை ஒவ்வொரு தமிழ் மகனும் அறிந்து, அவர்களது நூலை ஓதி நலம்பெறுவது அவசியம்.

அப்பெரிய மகானுடைய இனிய வரலாறு இப்போது வெளிவருவது மகிழ்ச்சிக்கு உரியது.

இதனை எல்லோரும் படித்து முருகப் பெருமானுடைய திருவருளும் குருவருளும் பெற்று உய்வார்களாக.

அன்பன்,

சென்னை,
15-10-64.

கிருபானந்தவாரி.

குருவே துணை

# முன்னுரை

தண்டபா ணிப்பெரியன் றன்வரலாற் றுச்சுருக்கம்
கொண்டவிர் இந் நூலின் குறிப்புகளை—மண்டலத்தோர்
கற்றுணர்ந்து போற்றிக் களிப்புற்று நல்வாழ்வு
பெற்றுயர்வர் நாளும் பெரிது.

மகான்-வண்ணச் சரபம், திருப்புகழ்ச் சுவாமிகள், முருக தாச சுவாமிகள் என வழங்கும் அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள் வரலாற்றைச் சுருங்கிய அளவில் கொண்டு விளங்குவது இந்நூலாகும். முற்காலத்தில் வாழ்ந்த பல புலவர்கள், தங்களது வாழ்வியலைத் தாமே எழுதிவைக்காத பெருங்குறை காரணமாக, அவர்களது வரலாற்றைப் பிற்கால மக்கள், பலவித மாற்றத்துடன் வழங்கக் காண்கிறோம். இக் குறையை நீக்கும் வகையில், தம் வரலாற்றைத் தொகுத்து ஸ்ரீதண்டபாணி சுவாமிகள் 'குருபரதத்துவம்' என்ற பெயரில் காவிய நூல் இயற்றியுள்ளார். இந்நூல் பதிப்பாகவில்லை.

இச்சுவாமிகள் வரலாற்றை முழுவதும் பிற்கால நிகழ்ச்சி யுடன் இணைத்துச் சுவாமிகள் மகனும் மாணவருமான தவத்திரு. செந்திநயக் சுவாமிகள் 'ஸ்ரீ தண்டபாணி விஜயம்' என்ற பெயருடன், பாடலாகப் பாடிவைத்தனர். இந்நூல் பதிப்பாகியுள்ளது.

அவை இரண்டும் பாடலாக இருப்பதால், எல்லோரும் எளிதில் உணரும் வகையில் "தண்டபாணீயம்" என்ற பெயரில் மிக விரிவாக உரைநடைப்பகுதியில் ஸ்ரீ செந்திநயக சுவாமிகள் எழுதியுள்ளார்கள். இஃது, இன்னும் பதிப்பாக வில்லை.

52-2



சுவாமிகள் வரலாற்றை, அவ்வப்போது சுவாமிகள் நூல் பதிப்பாகும் காலத்து, மிகச்சுருங்கிய அளவில் வெளியிடுவதுண்டு. இதன் சிறப்பறிந்த அன்பர்கள் பலரும், சுவாமிகள் வரலாற்றை முழுதும் அறிந்துகளிக்க விரும்பினர். திருவருட்செயலையும், அன்பர்கள் விழைவையும் துணையாகக் கொண்டு "தண்டபாணீயம்" என்ற நூலை அடிப்படையாக வைத்து ஓரளவு "சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்" என்ற வகையில், இந்நூலை ஸ்ரீ செந்திநாயக சுவாமிகள் மகனாரும், மாணவரும், எனது தந்தையாருமாகிய தவத்திரு. தி. செ. முருகதாச ஐயா அவர்கள் தொகுத்தளித்தனர்.

இந்நூலின் மூலம் ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் வரலாற்றை ஓரளவு அறிவதுடன், முருகன் பெருமை, அருளியல், செயற்கரிய செயல், புலமைச் சிறப்பு முதலிய பல செய்திகளை அறிந்து கொள்ளலாம். இவ்வரிய நூலானது ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் நினைவு விழா சென்னையில் திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் பேராதரவில் 1-11-64-ல் நிகழ்ந்தபோது வெளியிடப் பெற்றது. இச் சுருக்க நூல் வெளிவருவது போலவே, இவர்களது விரிவான வரலாற்றுநூலும், இவர் அருளிய பிறவகையான அருள் நூல்களும் வெளிவந்து அன்பர்கள் படித்துணர எல்லாம் வல்ல முருகப் பெருமான் திருவருள் துணைபுரிவதாக.

அன்பன்,

திருவாமாத்தூர்
விழுப்புரம் P.O.
25-10-'64

தி. மு. சங்கரலிங்கம்
தமிழாசிரியர்
கௌமாரமடாலயம்.

உ

குருவே துணை

# நன்றியுரை

"தண்டபாணி சுவாமிகள் வரலாற்றுச் சுருக்கம்" என்ற சிறந்த இந்த நூல், ஷை சுவாமிகள் நினைவு விழாவின் வெளியீடாக வருகிறது. தனது அநுபவமும், வரலாறுகளும் விரவ "குருபர தத்துவம்" என்ற பெயரால், 1000 கவிகளில் சுவாமிகள் பாடியுள்ளனர். அதில் வரலாறு வரிசைக் கிரமமாக அமைக்கவில்லை. பகுதி பகுதியாகப் பிரித்து, சருக்க முறையில் இயற்றினர். தனது வரலாறுகளை இறுதிவரை அவர்கள் பாட நேரவில்லை. அதைத் துணைகொண்டு வரலாறுகளை முறைப்படுத்தி, அவரது புதல்வரும், மாணவருமான, சந்தப்புலமை. தி. மு. செந்திநாயக சுவாமிகள், பாட்டு வடிவிலும், உரை நடையிலும் செய்திருக்கின்றார்கள். தனது ஆராய்ச்சி, அநுபவம் அவர்கட்குத் துணையிருந்தது.

இவ்விதச் சுருக்க நூல் ஒன்று இருப்பது நலமென்று, அன்பர்கள் விருப்பம் நீண்ட நாளாயிருந்தது. இதற்குரிய காலத்தை, இன்று திருவருள் கூட்ட இந்நூல் வெளியாகிறது. இந்த விழாவை, திருமுருக. கிருபானந்தவாரியார் சுவாமிகள் முன்னின்று நடத்த இசைவு தந்து, அதற்கான பல ஆக்கச் செயலையும் இனிது ஏற்படுத்திச் சிறப்புடன் வெளியீடும் செய்தார்கள்.

இவ்விழாவில், தலைமை தாங்கி நடத்தியவர், சென்னை சட்டசபை முதல்வர், உயர்திரு. செல்லபாண்டியன் அவர்கள். தொடக்கவுரை, ஏட்டுத் திறப்புரை, பாராட்டுரை, இவற்றில் பங்கு பெற்றுச் சிறப்பித்தவர்கள் ஒவ்வொருவரும் சிறந்த பேரறிஞர்கள். இவ்விழாவில் அவர்கள் சிறப்பிக்கமுன் வந்தமை பெரிதும் போற்றற்குரியது. பன்னெடுங்காலமாக இருந்த் இவ்விருப்பத்தை இனிது நடைபெறத் திருவருள் துணை செய்தது. பணியாற்றிய பலபெரியோர்கட்கும், விழா நடத்த இடமளித்த ஏவிஎம் தரும ஸ்தாபனமான, ராஜேஸ்வரி கலியாண மண்டபம் தரும ஸ்தாபனத்தார் அவர்கட்கும், அடியேனது பணிவு கலந்த நன்றியும் பாராட்டுதலும் என்றும் உரியது.

வணக்கம்.

இங்ஙனம்,

**தி. செ. முருகதாச ஐயா**

கௌமார மடாலயம், திருவாமாத்தூர்.

# உள்ளுறை

ரு



அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்

குருவே துணை



**மகான்-வண்ணச்சரபம்**

அருட்பெருந்திரு. **தண்டபாணி சுவாமிகள்**

# வரலாற்றுச் சுருக்கம்

### 1. தலத்தின் உயர்வும் தந்தையார் தவமும்

கடல் சூழ்ந்த பூவுலகத்தின் முகம் போன்று விளங்குவது செந்தமிழ் நாடு. அதன் தெற்கு எல்லையைச் சார்ந்து, திருவாலவாய் என்னும் மதுரை, திருப்பெருந்துறை, திருவில்லிபுத்தூர், திருச் செந்தூர் முதலிய தெய்வத் தலங்களைத் தன்னுட் கொண்டு சிறந்திருப்பது பாண்டி நாடு.

அந்த நாட்டில் அகத்திய முனிவர் வசிக்கும் பொதியை மலையிலிருந்து வருகின்ற "தாமிரபரணி" என்ற புண்ணிய நதிக் கரையில், ஸ்ரீ காந்திமதியம்மை யுடன், பரமசிவன், நெல்லையப்பர் என்னும் பெயர் கொண்டு விளங்கும் அழகிய திருக்கோயில் வாய்ந்தது "திருநெல்வேலி" என்னும் நகரமாகும்.

அந்நகரத்தில் அந்தணர், சைவர் முதலிய பல மரபினரும் நலமுடன் வாழ்ந்து வருகின்றனர். நல் லொழுக்கத்துடன் பொருட்பேறுடையவரும், சைவ வேளாளரும் ஆகிய **செந்திநாயகம்பிள்ளை** என்பவர்

ஒருவர் இருந்தார். அவர், நல்லோர்களை அன்புடன் ஆதரிக்கும் இல்லற வாழ்வுடையவர். கல்வி கேள்விகளிலும் வல்லுநர். அந்த நாட்டில் நெற்கட்டும் செவ்வல் என்ற பதியில் சிற்றரசரான ஒருவரிடம், (ஜமீனில்) தானாபதி என்ற பதவி ஏற்று அலுவல் புரிந்து வந்தார்.

அப்படியான காலத்தில், இல்லற வாழ்வினையுடையோர் மகப்பேறுடையராதல் வேண்டும்; அது இல்லாவிடில் மறுமையில் முத்தி கிடையாது; என்ற கருத்து அவருக்கு ஏற்பட்டது. ஆகவே மனையாளுடன் பலவித நோன்புகளை ஏற்றனர். பல தலங்கள் சென்று, புனித நீராடி, இறைவழிபாடு செய்தனர். நல்லறம் புரிந்தனர். கடவுளை நம்பினோர் அவரால் காக்கப் பெறுவர் என்ற உண்மை வெளிப்படும்படி, அவ்வூர்ப் பெருமானுக்கு நடைபெறும் திருக் கலியாண விழாவில், அம்பிகையின் திருவருளால் கிடைத்த அருளுரைப்படி, அவர் மனையாளான "பேச்சிமுத்து அம்மை" கருப்ப முற்றனர். ஆண்மகப் பேறு கிடைக்கப் பெற்று மகிழ்ந்தனர்.

## 2. பிறந்த நாளும் பிள்ளைச் சடங்கும்

கலியுகம் 4941-வதான (1839) விகாரி ஆண்டு கார்த்திகைத் திங்கள் 16உ சனிக்கிழமை அத்தநட்சத்திரத்தில் அவதரித்த மகவினைக் கண்டு அனைவரும் பாராட்டினர். சோதிடப் புலவர்களைக் கொண்டு சாதகம் எழுதினர். தொட்டிலிட்டாட்டல், காதணி சூட்டல், இன்னமுதூட்டல் முதலிய சடங்குகளை உரிய காலத்திற் செய்தனர். அவ்வாறு வளர்ந்த குழந்தை தான் **தண்டபாணி சுவாமிகள்** ஆவர். தந்தையார்

இட்டபெயர் **சங்கரலிங்கம்.** திருவருள் ஆணையின்படி அந்தப் பெயர் சூட்டினர்.

## 3. கல்வி பயிலலும் கவிகள் பாடலும்

மூன்றுவது வயது நடக்குங்கால், இளைய துணைவராக ஆண்சேயொன்றும் பிறந்தது. **சித்திரபுத்திரர்** என்னும் பெயருடன் அவர் விளங்கினர். ஐந்தாவதாண்டில் பள்ளியிற் சேர்த்துக் கல்வி பயில்வித்தனர். அக்கால முறைப்படி, பனையோலை ஏட்டில், எழுத்தாணி கொண்டெழுதிப் படிக்கும் பண்புற்றனர். ஒற்றுக்கு மேலே புள்ளியும், ரகரத்துக்குகீழ்க்கோடும் அப்போது இல்லை.

> **" ஒருமைக்கண் தான்கற்ற கல்வி, ஒருவற்(கு)**
> **எழுமையும் ஏமாப் புடைத்து "**

என்ற திருக்குறளின்படி, முன்னைய தொடர்பு பற்றி அதி விரைவில் கல்வியில் தேர்ச்சியுற்றனர். ஆசிரியரும் வியக்கும் " நுண்மாண் நுழைபுலம் " மிக்கவராயினர். இவ்வாறிருக்கும் நாளில் தந்தையார் உலக வாழ்வினை நீத்தனர். அக்கால் சுவாமிகள், ஆறரை ஆண்டுப் பருவமுற்றனர்.

அவ்வாறிருக்கும் நாளில், இவரது தந்தையாருக்கு மிகநெருங்கிய நண்பரானவர் சீதாராம நாயுடு என்பவர். மந்திர சித்தியில் வல்லவர். சிறு பருவத்திலிருந்த சுவாமிகளுக்கு, தம்மால் இயன்ற உதவி செய்ய வேண்டுமென்று சிந்தித்தனர். விநாயக மந்திரமும், இலக்குமியின் மந்திரமும் உபதேசித்து, பூசிக்கும் முறையும், செபிக்கும் இயல்பும் கூறினர். முன்னைய

நல்லூழ் கூட்ட, உறுதியுடன் ஆர்வத்தோடு அநுட்டித்தனர். இதனையுணர்ந்த சீதாராமர் மகிழ்ந்து, முருகக் கடவுளுக்குரிய ஆறெழுத்து மந்திரத்தையும் கூறினர். அதனை அன்போடு செபித்து, அதன் பயனாக மனதில் பல தோற்றம் கண்டு அவரிடம் தெரிவித்தார். அவரும் வியந்தனர். அதன்பின், தென்காசி நகரை யடுத்த சுரண்டை என்னும் பதியில் இவரது பெரிய தாயாரின் வீடு இருந்ததால், பெரிய தந்தையான சிதம்பரம் பிள்ளை என்னும் குணசீலர், சங்கரலிங்கரை அன்புடன் அழைத்துச் சென்று, வேண்டிய வசதியுடன் அவ்வூர்ப் பள்ளியிற் கல்வி பயிலச் செய்தனர். அப்படிச் சிலகாலம் தங்கிக் கற்றனர். வயது எட்டரை ஆயிற்று.

அவ்வூரின் அருகிலுள்ள, சித்திரா நதிக் கரையில் ஓர் அம்மன் கோயில் உள்ளது. அங்கு பலர் கூடிச் சிறப்பான முறையில் தூய்மையுடன் வழிபாடு செய்யும் போது இவரும் சென்றிருந்தனர். அந்த அம்பிகைக்குப் **பூமிகாத்தாள்** என்ற பெயர் பலரும் கூறுவது கேட்டனர். இந்தப் பெயர் வந்த காரணம் யாது என்று அங்கிருந்தோரிடம் கேட்டனர். யாரும் தக்க பதில் கூறவில்லை. அந்த வேளையில் சங்கரலிங்கர் திருவருளின் செயலால் முன்னைய தொடர்பு காரணமாக ஒரு வெண்பா புதியதாகக் கூறிப் பொருளும் கூறினர்.

**"அமுதம் கடையுங்நாள் ஆலம் வெடித்துத்**
**திமுதமெனத் தீயெரித்துச்சென்ற(து)—அமுதமெனத்**
**தீக்கடவுள் உண்டார் திருக்கண்டத் தைப்பிடித்துக்**
**காத்ததனாற் பூமிகாத் தாள்.**

என்பது அப்பாடலாகும்.

முன்னொரு காலத்தில், தேவரும் அசுரரும் கூடித் திருப்பாற் கடலில் மந்தர மலையை மத்தாக நட்டு, ஆதிசேடனை வடமாகப் பூட்டி, அமுதம் கடைந்தார்கள். அப்போது அவர்கள் கடவுள் வணக்கம் செய்யாத படியால் விடம் தோன்றியது. அது கண்ட தேவர் முதலிய பலரும் கயிலையிற் சென்று சிவபிரானை வணங்கி முறையிட்டனர். அவர் அந்த விடத்தை எடுத்து உண்டனர். அதனால் அவருக்கு ஊறு நேருமோ என அஞ்சி, கருணை வடிவாக அருகிலிருந்த உமையவள் சிவபிரானது கழுத்திற் கைவைத்து விழுங்காவிதம் தடுத்தாள். அதனால் அவருடைய சொரூபமாக உள்ள உலகம் உய்ந்தது. ஆகையால் அந்த அம்மைக்குப் பூமிகாத்தாள் என்ற பெயர் வந்தது என்று கூறினர். அதுகேட்ட பலரும் வியந்து மகிழ்ந்து, இவரைப் பாராட்டினர். அது முதலாகப் பலவிதமான புதுக் கவிகள் பாடும் இயல்புற்றனர். பள்ளிப் படிப்பே நன்கமையாத பருவத்திற் புதுக் கவி பல பாடினர். ஏட்டிலெழுதினர் என்றால் தெய்வத் திறம் இவரிடம் உள்ளமை புலனாகிறது.

## 4. கனவினில் அருட்டிறம் கண்டு மகிழ்தல்

மற்றொரு நாள், சங்கரலிங்கர், தமது உபாசனைக் கடவுளான முருகப் பெருமானை நினைத்து, என்மீது உன் கருணையிருப்பது உண்மையானால், அதற்கு அடையாளமாக ஒரு காட்சி கனவிற் காட்ட வேண்டுமென்று வேண்டித் துயில்வதானார். இரவு ஒரு விநோதமான கனவு காணலாயினர். அதாவது, திருநெல்வேலியில் தென்மேற்கு மூலையான நாற்சந்தியிடம் ஒன்றில், ஒரு மாந்திரீகன் சிலருடன் உரிய பலபொருள்களும் விளங்க

வந்திருந்தான். பெரிய ஒரு பறையை முழக்கினன். பல மக்கள் கூடினர். மந்திர வித்தையில் என்னைவிடச் சிறந்தவர் எங்குமில்லை. யானே வல்லவன் என்றே தினன். அது கேட்ட கூட்டத்தார் யாரும் பேசா திருந்தனர். சிறு பருவத்தினரான இவர், துணிவு கொண்டு மந்திரவாதியை நோக்கி, **"யான் எத்தனையோ மந்திரவாதிகளைக் கண்டுள்ளேன். ஒருவராவது உன்னைப் போல அகங்காரம் கொண்டு தற்புகழ்ச்சி கூறவில்லை. தம்மைத் தாழ்த்தியே பேசினர். நீ இப்படிப் பேசுவது முறையன்று. மிகச் சிறந்த மேலோர்கள் பலர் உலகில் உள்ளனர். அவர்கள் உனது அகந்தை மொழிக்குப் பதில் கூறமுன் வரமாட்டார்கள். அதனால் மேலோர்கள் இல்லையென்பது தவறு, சிறியவனை என்னிடமே உன் வலிமையைக் காட்டுக, அதன் பின் பார்ப்போம்"** என்றனர்.

அது கேட்ட அவன் சினமடைந்து பெரிய ஒரு கூடையைத் திறந்தான். அதன் உள்ளிருந்து பனை போன்று நீண்டு பருத்த பெரிய பாம்பு ஒன்று சீறி வெளியே வந்தது. இவரைச் சுற்றிலும், மேலே படாமல் வளைந்து, உயரத்தில் படம் விரித்துக் கவிந்தது. கண்டு மனம் ஓரளவு பதறியும் நிதான மிழக்காமல், தமது மனத்தில் முருகனது ஆறுமுகம் பன்னிரு திருக்கரம் முதலியவற்றைத் தியானித்தனர். உடனே அந்தப் பாம்பு அப்படியே மேல் எழும்பி வானத்தின்மீது சிறிது தூரத்தில் நின்றது.

அச் செயலையறிந்தவுடன் மனதில் தைரியம் ஏற் பட்டது. அவனைக் கண்டு, நகைத்து. இவ்வளவு தானே. இன்னும் உன் வித்தை உண்டோ? எனக்

கேட்டனர். அதைக் கேட்டவுடன் அம்மாந்திரீகன், மேலும் ஒரு மந்திரம் செபித்தனன். உயரமுடைய தாய், கறுப்பு நிறமும், மாறு கண்ணும், கையில் வாளும், தண்டமும் கொண்டு சல்லடம் தரித்த பேய் ஒன்று வந்தது. சங்கரலிங்கர் அப்போது முருகக் கடவுள்மீது ஒரு புதுப்பாடல் பாடினர். அது சேவலைப் புகழ்ந்த பாடல்.

**"எல்லாப் பதாகைக்கும் மேலாங் கொடியில் இருந்து,மறை**
**வல்லான்றன் அன்னத்தை உண்டுமிழ்ந்(து) எல்லவன் வந்துலகிற்**
**பொல்லாங் கொழிக்கத் தினங்கூவும் சேவலும் பொற்பில்உயர்**
**உல்லாசக் கந்தன் மயில்வா கனத்தின் உடன்பிறப்பே.**

என்பதாம்.

உடனே ஒரு பெரிய வெள்ளைச் சேவல் வானத்திலிருந்து பறந்து வந்தது. அதன் வடிவம் மூன்று மைல் நீளம் விரிந்த சிறகுடனிருந்தது. வந்த அச்சேவல், மந்திரவாதி, பாம்பு, பேய், உடனிருந்தோர், கூடை, பறைகள், முதலியவற்றைக் கொத்தி விழுங்கியது. சேவல் மறைந்தது. சங்கரலிங்கர் விழித்தெழுந்தனர். உடல் சுரண்டையில் இருந்தது கண்டார். அதிக வியப்பும் மகிழ்ச்சியும் உற்றார். திருநீற்றையணிந்து திருவருளைப் போற்றினர். உலகத்துள்ள சேவல்கள் கூவின. சூரியன் உதயமாயினன்.

## 5. முருகதாசர் முனிவராய் அவிர்தல்

இவ்விதம் சுரண்டைப் பதியில் வசித்த சங்கரலிங்கர், சிலகாலம் கழித்து, கல்வியில் தேர்ச்சி பெற்று, திருநெல்வேலி சேர்ந்தனர். தனக்கு நேர்ந்த தெய்வீகச் செயலைத் தனது குருவாயுள்ள சீதா ராமரிடம்

சொல்லினர். கேட்டு மகிழ்ந்து "**நல்விதிகாரன்**" என்றும், பல பாடல்களை விரைவிற் பாடும் தன்மை யால் "**ஓயாமாரி**" என்றும் இவருக்குப் பெயரிட்டனர் சீதாராம நாயுடு.

இவரது உபாசனையின் பெருமையுணர்ந்து, உல கத்தின் கண் உள்ள அன்பினர் "**முருகதாசர்**" என்ற பெயரை வழங்கினர். அப்போது வயது பதின் மூன்று ஆயிற்று. இவர் வண்ணயாப்பில் பல அரும்பெரும் பாடல்களை எளிதிற் பாடுந் தன்மையை அடைந்தனர். பொதியை மலைச் சார்பான திருமலையில் முருகனுக்குத் திருப்புகழ் பாடி அரங்கேற்றினர். திருநெல்வேலியில் சீதாராமரிடம் பல செய்திகளைப் பேசி வரும் சமயம், இல்லறத்திருந்து முத்தி பெறுவது முறை யென்றனர் அவர். துறவு பெற்று முத்தி பெறுவது சிறப்பென் றனர் சுவாமிகள்.

மாமிசம் உண்பவரினும் நல்லோர், பெரியோர் உண்டென்றனர் அவர். உயிர்களை உடம்பை விட்டு நீங்குமாறு கொன்று, அருவருப்பான புலாலைத் தின்று உழல்பவர் ஒருகாலும் பெரியோராகார். மேலும், வேத விதியென்று சொல்லி, வேள்வியிற் கொல்பவர்களும் உள்ளபடியே பெரியோராகார். உயிர்கட்கு எவ்வித இன்னலும் செய்யாத நல்லோரே பெரியோர். இரக்க மில்லாதவர் அரக்கர் என்றும் விடை கூறினர். "கொல்லா விரதம் குறிக்கொண்டோர் நல்லோர்" என்ற தாயுமானுர் பாடல் ஈண்டு உன்னுதற்குரியது..

சிலநாள் கழித்து முருகதாசர், வள்ளியூர் மலைக்குச் சென்று முருகனை வணங்கித் துதித்து, கல்லாடை, வங்

கோடு, கௌபீனம் இவற்றை முருகன் திருமுன் வைத்துப் பூசை செய்வித்து, அவற்றை யணிந்தனர். பிறகு, முருகதாசர் திருநெல்வேலிக்கு வந்து தனியிடத்திருந்து செபதவ மியற்றியிருந்தனர். திருச் செந்தூர், திருவுருமாமலை முதலிய பலதலங்களுக்குச் சென்று பனுவல் பாடித் துதித்தும் அருள் கிடையாததால் மனம் வருந்தினர். உலக நன்மைக்காகத் திருவருள் பெற நாள் கடப்பதால், சிறு தெய்வ வழிபாடு செய்தேனும் அருள் பெற்றுச் சிறு செயல்களைச் செய்யப் பொருளுதவி பெறுவோம். பின்பு முருகன் அருளைப் பெறத் தவம் செய்வோம் என்று கருதினர்.

முருகதாசர், முதலில் "மாடன், சுடலை, அநுமார், வயிரவர் முதலிய கடவுளர்களைத் தனித் தனியே தூய முறையில் வேண்டி உபாசித்தனர். ஒவ்வொன்றும் இவரது நிட்டையில் தோன்றின. "உண்மையான பிரம்ம சொரூபத்துக்கு நான் வேறல்லன்" என்று கூறி மறைந்தன. அது கண்ட இவர், அதுவரை வேறென்று கருதிச் செய்த தவம் உண்மைக் கடவுளான முருகனுக்கு உரியதாகுக! என்று தத்தம் செய்தனர். பின் வழக்கப்படி முருகனையே வழிபடலானார்.

## 6. திருமலை முருகன் திருமுன்னின் றுருளல்

சிலநாள் கடந்து முருகதாசர், திருநெல்வேலித் தாமிரபரணி ஆற்றின் நடுவில் உள்ள திருவுருமாமலை (குறுக்குத் துறை) என்னும் முருகன் சந்நிதியில் தமது கவிகளெழுதிய ஏட்டுச் சுவடிகளைப் பெட்டியில் வைத்து, திருமலை என்னும் முருகன் தலம் சென்றனர்.

"உனது தெய்வீகக் காட்சியை இப்போது கொடு! இன்றேல் உயிருடன் வாழேன்" என்று ஆணையிட்டுப் போற்றினர். முருகன் காட்சி வழங்கவில்லை. இவருக்கு வைராக்கியம் பிறந்தது. மறு நாட்காலை, சந்நிதிக்கு முன்புறம் நேர் கிழக்குத் திசையில் நின்று, பல புதுப் பாடல் கூறினர். வடக்கில் தலையமையும்படிவணங்கி யவாறு, தெய்வ சிந்தனையுடன் உருண்டனர். உடல் அதிவிரைவில் உருண்டு வந்து, கீழே ஒரு மண்கண்டத் தில் விழுந்தது. மயங்கிச் சில நேரமிருந்து தெளிந்தனர்.

அப்போதுதான், உடலில் ஓர் அங்கமும் பழுது படாமலும், உயிர் நீங்காமலும், இருந்ததோடு, முருகன் காட்சி வழங்காமலும் இருந்தது கண்டு மனம் அயர்ந்தனர். தன்னுடன் வந்திருந்த சரவண தாசர் என்னும் அருணசலத் தொண்டைமானுகிய மாணவ அன்பர் கண்டு மிகவும் மனம் வருந்தியபோது, சமா தானம் கூறினர். உடல் பாறையில் உரைந்த சிறு பகுதியில் இரத்தம் கசிந்தது. திருநீற்றினையே மிகு தியும் இட்டு, அணிமையில் உள்ள செங்கோட்டை சென்றனர். அங்கு, முருகன் நிட்டையிற் றேன்றி, **"நீ, மலையில் ஏறி ஏன் உருண்டனை, உயிர் நீங்கியிருந் தால் என் செய்வாய்! அப்படி நீங்காமல், நான் மறைந்து நின்று காத்தேன்"** என்றனர். அதற்கு இவர், **எனக்கு இந்த உடல் அழிந்தால் அடுத்த உடலொன்றைப் பிரமன் கொடுக்கக் காத்துள்ளான். நிலையாயுள்ள உயிரான எனக்கு அழிவேது,"** என்றனர். அது வினவிய முருகன் மகிழ்ந்து, முருகதாசரை எடுத்துத் தழுவி, முத்தமிட்டு நீ இந்த விபத்தில் பிழைத்ததனுல், **"திருவுருவாளன்"** என்று ஒரு பெயர் கூறி மறைந்தான்.

பின் நிட்டை தெளிந்து, நிகழ்ச்சியையறிந்து, முருகனது திருவுள்ளம் இதுவோ என்று முருகதாசர் எண்ணினர். செங்கோட்டையில் ஓர் அன்பர், சுவாமிகளது உடம்பில் உள்ள கோரைகள் தீர்வதற்கு ஏற்ற வகையில் சாந்தி புரிந்தனர். ஒரு காயமட்டும் சில நாள் உலராதிருந்தது, திருவருளால் பின் ஆறியது. திருநெல்வேலிக்கு வந்தபின், தாய் முதலியோர் கண்டு மனம் வருந்தினர். திருவருமாமலைக் கோயிலில் வைத்திருந்த ஏட்டுப் புத்தகங்கள், ஆற்று வெள்ளத்தாற் சேதமுற்றது தெரிந்தனர். மனம் வருந்திச் சினந்து, கைவசமிருந்த ஏட்டுச் சுவடிகளையும் கிழித்து நதியில் எறிந்தனர். இப்படி மறைந்த பாடல்கள் பல.

ஒருநாட் காட்சியில், வள்ளிநாயகி, குறி சொல்லும் குறமங்கையாக வந்து, இவரது தோளில், மலையில் உருண்டதால் ஏற்பட்ட ஒரு புண் ஆறும்படி திருநீறு பூசி, இவரது வாயிலும்இட்டு,நெற்றியிலும்தரித்தனள் "அவள் தன்னீற்றுக், கோயிலவிழ்த்(து) ஒரு மூன்று விரலால் அள்ளிக்கொண்டு வந்(து) என் இடத்தோளிற் குளிரப் பூசி, வாயிலிட்டு நெற்றியினும் தரித்தாள்" என்ற சுவாமிகள் வாக்கினுல் அறியலாம். நான்கு மாதமாகியும் ஆறுதிருந்த அப்புண் இரண்டு மூன்று நாளில் உலர்ந்தது. தமது இளைய துணைவர், சித்திர புத்திரர் கல்வி பயிலாமல் இருந்தது கண்டு, வயது வந்தும் கல்வி பயிலாத சில மாணவர்களையும் கூட்டி, பள்ளியமைத்து, திருவருளால் அனைவரும் விரைவில் பெரும் புலவராயமையப் புரிந்தனர். இவரது தம்பி அனைவரினும் சிறந்த புலவராய் விளங்கினர். சித்திர புத்திரருக்குத் திருமணம் புரிந்தனர்.

## 7. தாசர் பாடலைத் தனதெனக் குகன் சொலல்

முருகதாசர் என்னும் இவர், திருநெல்வேலிப்பதியில் உள்ள தமது பிறப்பிடமாகிய இல்லத்தின் முன்னுள்ள கூடத்துச் சுவரினிடத்து, கிழக்குத் திசை நோக்கிய நிலையில், செந்நிறக் காவியால் சண்முகப் பெருமானை, சிற்பநூல் முறைப்படி ஓவியம் அமைத்தனர். வெள்ளியினால் வேலாயுதம் செய்து சாத்தி, பூரணகும்பம் நிறுவி, வேள்வி புரிந்து, அந்த நீர் கொண்டு வேலாயுதத்துக்கு அபிடேகித்தும், தாம் முழுகியும், சிறப்பு வழிபாடுகள் செய்து வந்தனர். ஒவ்வொரு மாதங்களிலும் இத்தகைய பூசனை நடத்துவர். அந்தச் சமயங்களில் இயற்றப்பட்ட பாடல்கள் பல. மனவெளி நிட்டையிற் காணும் அருட் காட்சிகள் பல. நனவில் நடந்த அருட் செயல்கள் பல. அகத்தியர், நாரதர், வீரவாகு தேவர், முதலிய பரிவாரங்களை நிறுவி, அவரவர்க்குரிய இடங்களில், பொன், வெள்ளி, தாமிரத் தகடுகளில், மந்திரங்களை வரைந்த யந்திரங்களை வைத்துப் பூசனை புரிந்தனர்.

அக்கால், நெய்ப் பாத்திரத்துக்கு ஆதரவாக வைத்திருந்த செங்கற் பகுதி அதே வடிவில் சர்க்கரைக் கட்டியாயிருந்தது கண்டு, அதனைப் பலருக்கும் வழங்கினர். முற்காலத்தில் சுந்தரமூர்த்தி நாயனாருக்குச் செங்கல் தங்கமாயிற்று என்பதற்கு இது ஒரு தக்க சான்றாகும். எலுமிச்சம்பழம், வைத்திருந்த எண்களை விடக் கூடுதலாய் இருந்தது. இது போன்றவை பல.

ஒருநாள், தமது வழிபாட்டுக்குரிய சித்திர வடிவக் குமரக் கடவுள் முன்பு தலை வைத்து, இரவில் துயில்

கூர்வர். அக்காலத்தில், ஒரு காட்சி கண்டனர். நாரத முனிவர் வீணையை ஏந்தி இவரருகில் வந்து அமர்ந் தனர். வணங்கவேண்டுமென நினைத்தனர். செயல் நிகழ்வதற்குள், தலைப்பக்கம் அமர்ந்த நாரதர், இவரை நோக்கி, "உனக்கு அளவு கடந்த தமிழ்ப் பாடல் கூறும் வாக்கு உண்டாகச் செய்தது யார்" என்று வினவினர். அதற்கு விடை சுவாமிகள் கூறுமுன்பே, ஓவிய வடிவில் உள்ள பெருமான், தனது வலக்கரத்தால் மார்பில் தட்டி, **குமரகுருபரனாகிய அடியேன் தான் செய்தேன்,** என்று மும்முறை கூறினர். நாரதர் இசை யெழுப் பினர். கனவு மாறி நனவு வந்தது. இதனை,

> **"என்பாட லேயென யான்பாடும் பாத்தொகை யாவையும்சேய்**
> **தன்பாட லேயெனச் சான்றுகின் றுன்எந்தத் தன்மை**
> **கொண்டோ"**

என்று மயிலலங்கார நூலில் சுவாமிகள் பாடியுள்ளனர்.

இதுபோற் பல பாடலிற் சுவாமிகள் கூறுகின்றார். "நானென்று மார்தட்டும் பெருமாளே" என்ற அருணகிரிநாதர் திருப்புகழ்க் கவியோடு, இவருக்கும் முருகன் மார்தட்டிய செய்தி ஒப்பு நோக்கற்குரியது! பேயாற் பிடிக்கப்பட்டவன் வாய்ச் சொற்கள் யாவும் பேயின் சொற்களேயன்றி அவன் சொற்கள் ஆகா வாம், சிவபெருமானால் அதிட்டிக்கப்பட்ட ஞான சம்பந்த சுவாமிகளின் பாடல்கள் யாவும் சிவபிரான் அருள் வாக்கே யன்றி, தன் வாக்கு ஆகாமையை அறி விக்க "எனதுரை தனதுரையாக" என்று இலம் பையங் கோட்டூர்த் தேவாரப் பதிகத்தில் அவர் கூறுவதுபோல, முருகன் திருவருள் வயப்பட்டு இவர் கூறும் பாடல்களை முருகப் பெருமானே 'தன் செயல்,

தன் பாட்டு " எனக் கூறுகின்றார், எனக் கொள்ள வேண்டும். அன்றியும், இவர் எழுத்தாணி யானது, " சர்வ சாதாரணி " என்று முருகனே பெயர் கூறிய விவரம் இவர் பாடலாலறிகிறோம். நினைப்பதொன்று, எழுதி முடிவதொன்றாகவே தனது பாடல் அமையும். என்கிறார் சுவாமிகள்.

" என்மனதில் ஒன்றெண்ண, என்கை மற்றொருவண்ணம்
எழுதிடும் இயற்கை "

என்பது கவி.

## 8. மந்திரத் தொழிலோர் வஞ்சனை தவிர்தல்

அவ்வாறிருக்கும் நாளில், இவருக்கு உபதேச குருவான சீதாராமரது புதல்வன் முத்துக் கிருட்டினன். தந்தையைப் போலவே, மந்திரவாதத் தொழிலில் ஈடுபட்டவன். அழுக்காறு மிகவும் கொண்டவன் ஆதலின், இவரது பண்பாடு, புகழ் ஆகியவற்றில் மனம் வேறுபட்டவனானான். தந்தை முன்னிருந்து இவரைப் பல நிந்தை மொழிகளைக் கூறினன். பதிலுக்கு இவரும் ஒருவன் சொல் சினந்து கூறினர். தந்தையான சீதாராமர், மகன் சார்பில் பேசினர். சுவாமிகள் மனம் வருந்தினர். " உன்னைக் குருவாக நம்பும் உரிமை என்னிடம் உளது. அதுபோல, என்னையும் புதல்வனாக ஏற்கும் குருத்துவத்தை இழந்தாய் ! உண்மை எனக்குத் துணை செய்யும் " என்று கூறி, அவ்விடத்தை விட்டகன்று, திருவுருமாமலைக் கோயிலில் வந்து தங்கினர்.

அன்றிரவே, முத்துக் கிருட்டிணன் விநாயகரைச் செபித்து இவரைக் கொல்லுமாறு ஏவல் செய்தனன். கோரமான யானை வடிவுடன் கனவில் தோன்றி,

எதிர்த்தனர் விநாயகர். அவனும் எதிரில் உடன் நின்றனன். அப்போது முருகப் பெருமான், குருவான சீதாராமர் வடிவில் முழுநீறு பூசி, வேலாயுதம் தாங்கி, அக்கமணிமாலை பூண்டு முன்தோன்றி, 'அஞ்சற்க! அந்த யானை இங்கு வராது. உன்னையும் ஒன்றும் செய்யாது" என்று கூறியருளினர். விடிந்து ஆற்றில் நீராடி, முருகனை வணங்கி, சீதாராமரைக் கண்டு, நடந்தவற்றைக் கூறி, இனி நீ எது செய்யினும் செய்க என்று சொல்லி, தம்து இல்லம் வந்து, கூடத்திலுள்ள முருகனை வழிபட்டிருந்தனர். அவரது வேறு ஒரு மகன் அம்பிகையை ஏவினன். அம்பிகை கோரவடிவம் காட்டாமல் சிறு கன்னிகை வடிவில் விளங்கினள். "நீ, என்மீது ஒரு பாட்டுப் பாடு. கேட்டுச் செல்கின்றேன். அவன் ஏவியதால் வந்தேன்" என்று சொல்லினள். அது கேட்ட முருகதாசர், அம்பிகை மீது இனிய பாட்டொன்று கூறினர். அந்தப் பாடல் வழக்கத்தில் இல்லை அவ்வளவில் அவர்கள் அடங்கினர்.

தமது புதல்வர்கள் செய்த ஏவல் பலித மடையாதது கண்டு, சீதாராமர், தமது உபாசனைக் குரிய முருகக் கடவுளைச் செபித்து ஏவினர். பாசத்திற் கட்டுப்பட்ட குரு, சீடனென்ற உரிமையின்றிக் கொல்ல எண்ணினர். அபிமானம் யாருக்கும் கேடுதருவது என்பது புலனாயிற்று. அவர் கருத்துப்படி முருகன் இவரது கனவில் வச்சிராயுதம் ஒற்றைத் தாங்கி முன்வந்தனர். அக்கால், சுவாமிகளிடம் அருகிலிருந்த வயிரவர், ஒரு நாய் வடிவில் சென்று எதிர்த்தனர். அதனால் முருகன் தடைப்பட்டு நின்றனர். ஏவலில் வந்த முருகன் நாயை மட்டும் ஓரடியடித்துச் சென்றனர். அதனால் உபாச

கனது பாவனையின்படி உருவங் கொண்டு நிற்பது உபாசகனது அறிவின் கலையேயாகும். தெய்வம் அதனில் வேறாகாமல் ஒன்றாகி நிற்கும் பொதுப் பொருளே என்பது தெளிவாம்.

## 9. சென்னைப் பிள்ளைத்தமிழ் திகழரங் கேற்றம்

வேலாயுதம் வைத்துச் சிறப்பு வழிபாடும், அடியவர்க்கு அமுதளித்தலும், ஆடை வழங்கலும், நடத்தினர். முருகன் வழிபாடு செய்வதால் முருகதாச சுவாமிகள் என்றும், உச்சி முதல் உள்ளங்கால் மட்டும் திருநீற்றுப் பூச்சும், லங்கோடு கோவணம் கல்லாடை அணிந்தும், கையில் தண்டாயுதம் பூண்டும், சிரசில் சிகையை அவிழ்த்துத் தொங்க விட்டும் விளங்கும் கோலத்தால், தண்டபாணி சுவாமிகள் என்றும், புதிய திருப்புகழ்பல பாடிய தன்மையால், திருப்புகழ்ச் சுவாமிகள் என்றும், எதிர்த்த புலவர் வாய் அடங்க வண்ணம் பாடும் வலிமையை உணர்ந்தவர்கள் ‘வண்ணச் சரபம்’ என்றும் ஓதிப் பாராட்டினர். முதலில் தாய் தந்தையர் திருவருட் சார்பினால் இட்டழைத்த பெயர் “சங்கர லிங்கம்” அது வழங்கப் பெறவேயில்லை

சிலகாலம் பொறுத்து திருநெல்வேலியிலிருந்து வடதிசை நோக்கித் தலயாத்திரை தொடங்கினர். திருப்பரங்குன்றம், மதுரை, சிதம்பரம் முதலியவற்றைத் தெரிசித்து, திருமயிலாப்பூர் வந்து அங்கு ஓர் சத்திரத்தில் அமர்ந்தனர். இவரது திருவேடம், இருபத்திரண்டு வயதளவில் உள்ள இளமை வடிவம். தெளிந்த உள்ளம். இவற்றைக் கண்டதும் அங்கிருந்த சிலர் இகழ்ச்சிக் குறிப்பாகத் தம்முள் பேசினர்.

அதையறிந்த சுவாமிகள் " இன்னமும் பிறவி நேராமல் முத்தியடைய வேண்டிய உறுதியுடையவர் கூட்டத்திற் சேர்ந்தவன் தான் அடியேனும். எனது கருத்தை அறியாமல் இகழாதீர்கள். முருகக் கடவுளைக் கருதி வழிபாடு, உபாசனை, செய்கின்றேன். அவன், அதன் பயனாக முத்தமிழ்க் கவிகள் பாடும் வாக்கை அருளியுள்ளான். 'கேண்மின்கள்' என்று கூறிச் சில சந்தப் பாடல்கள் கூறினர். பின் அவர்கள் பயந்து வியந்து நயந்து உரையாடினர். அவர்களுள் ஒருவர், திருச்சிற்றம்பல ஞானியார் என்பவர். அவர் இவருடன் துணையாகினர். சென்னையில் புலவர்கள் சபைகளிற் சென்று பழகித் தமிழ்ச் சுவை பருகினர்.

யாழ்ப்பாணம், ஆறுமுக நாவலர் முதலிய பலரும் இவரைக் கண்டுபெருமகிழ்வுற்றனர். சென்னையம்பதியில் உள்ள கந்தகோட்டத்து முருகப் பெருமான் மீது அரிய தொரு பிள்ளைத் தமிழ் முதலிய பல பனுவல் பாடி முடித்து, அரங்கேற்றம் செய்யும்படி அறிவிப்புப் பதித்து, வெளியிட்டனர். குறித்த நாளிற் பெருந்திரளான மக்கள் கூடினர். சபையில் பிள்ளைத் தமிழை அரங்கேற்றினர் சுவாமிகள். அங்கு, பல புலவர்கள் கூடினர். அவருள் காஞ்சிபுரம் மகாவித்வான் சபாபதி முதலியார் சுவாமிகளிடம் சில வினாக்களை எழுப்பினர். தாலப்பருவம், 9-வது கவியில்,

**" செக்கரும் ஒஞ்சிய செம்மைநிறம்பெறு**
**சேயே தாலேலோ "**

என்ற அடியைப் படித்தனர். "ஒஞ்சல்" என்ற கருஞ்சொல்லானது என்ன பொருளையுடைய தென்றனர் முதலியார். "நாணுதல்" என்ற பொருளைத்தரக் கூடிய

வெண்சொல் ; பாண்டி நாட்டில் மாதர்களும் பேசும் வழக்கமுடையது என்றனர் சுவாமிகள். அவர் எனது ஆராய்ச்சி நூலில் அதனைக் கண்டிலேன் என்றனர் புலவர். சுவாமிகள் அவையினரைப் பார்த்து, இப் பெருங் குழுவில் நமது பாண்டி நாட்டினன் ஒருவன் இன்றோ? என்று உரத்த குரலிற் கேட்டனர். ஒரு சைவர் எழுந்து இதோ உள்ளேன். இம்மொழி நமது நாட்டில் உண்டு. அறிவேன் என்றனர். இது போல் இன்னும் பலசொல் எங்கள் நாட்டில் உண்டெனக் கூறி விட்டு, மற்றைய பாக்களையும் படித்துப் பொருள் விளக்கினர்.

சப்பாணிப் பருவத்தின் ஈற்றுக் கவியில் "சென்னையில் **வைகினை** கொட்டுக் சப்பாணி" என்ற சந்தப் பாடலைப் படித்தனர் கையேடு படித்தவர். அவரிடம் மறுமுறை கூறும்படி கேட்டனர் புலவர். சுவாமிகள் என்ன ஐயம்? என்றனர். **வைகி** என்ற சொல்லின் சந்தம் யாது என அவர் வினவினர். விரைவில் **தய்ய** என்றனர் சுவாமிகள். அல்ல என்றனர் புலவர். அல்லவென்றால் யான் காது இழக்க நேருமல்லவா எனக் கூறினர் சுவாமிகள். அப்படியானால் இருசெவியும் இழப்பேன் என்றனர் முதலியார். அப்போது சுவாமிகள், மீனாட்சியம்மை மீது பாடிய பிள்ளைத் தமிழில் குமரகுருபரர், **வைதிகப்பாட்டினர்** என்று கூறியதற்கிணங்க யானும் **வைகினை** என்று **தய்யன** என்ற சந்தத்திற்கிசைத்தேன் என்றும், மேலும் பல விவரமும் கூறினர். "நல்ல திருவாகி" என்று புகழுரை கூறிப் புலவர் சமாதான முற்றனர். நூல் முடிந்த சமயம் அவரது மாணவரான, புரசை அட்டாவதானம்-

சபாபதி முதலியார் மிகவும் சுவாமிகளைப் பாராட்டினர். அடிகள் மகிழ்ந்து

**சந்தமலி அட்டாவ தானச் சபாபதிக்கிங்(கு)**
**எந்தச் சபாபதியும் ஈடில்லை—கந்தனருள்**
**பெற்றேன்; அறிவாற் பெரியோரைப் பேணும்நலம்**
**உற்றேன்; முழுப்புலமை யோன்.**

என்னும் வெண்பா ஓதிப் புகழ்ந்தனர். அந்தச் சபைக்கு வந்து சுவாமிகள் சொற்களை வினவ அதிக ஆவல் உள்ள ஓரன்பர், வைணவப் பற்று மிகவுடையவர். தமிழருமை நன்கறிந்தவர். சபைக்குச் சென்று வந்த ஓரன்பரிடம், சுவாமிகள் பாடலைக் கேட்க ஆவல் மிகவும் உண்டு. வருதற் கேற்றபடி இடம் இல்லையே. என்றனர். முருகன் கோயிலாயிருப்பது பற்றி அவருக்கு ஒரு ஐயம். மறுநாள் சுவாமிகளிடம் அவ்விவரம் கூறினர் அன்பர். வினவியவுடன், ஆயின் "நாம் கூறும் செய்தியை அவரிடம் கூறிவருக' என்றும். இவ்வளவு தமிழ் அருமையும் நம்மீது அன்பும் இருந்ததற்கு மகிழ்ச்சிதான். **திருமால், தமது திருவடியால் இந்தவுலகத்தை அளந்த போது, கந்தசாமி கோயிலைச் சேர்த்து அளந்தாரா. நீக்கி அளந்தாரா** என்றும் அவரைக் கேட்டு வருக என விடுத்தனர். அவ்விவரம் கேட்ட, அவர் அஞ்சியவராய் வந்து வணங்கித் தமது பேதம் அகன்ற விதம் கூறிப் போற்றினர். இப்படிப் பல நிகழ்ச்சிகள். மேலும் கந்த கோட்டப் பெருமான் மீது, வண்ணம், திருப்புகழ்-மற்றும் பல விதப் பனுவல்கள் பாடி அரங்கேற்றினர். தமது வேலாயுத பூசனைக்கு ஏற்பட்ட பொருட்கடன் தீர்தற் கேற்ற பொருள் உதவுவான் என்று எண்ணியபடி முருகன் உதவாதது கருதி ஓர் வெண்பா ஓதினர்.

**சென்னைநகர்க் கந்தாகீ செட்டிகளைச் சேர்ந்தாலும்**
**உன்னை உதாரியென்றே உன்னினேன்-என்னையிவ்வா(று)**
**ஏமாறச் செய்தனையே இன்னுமென்ன செய்வாய்!என்**
**பாமாலைச் சொற்கள்கசப் பா.**

என்பதாம்.

திருவொற்றியூர் இறைவனைத் துதித்து, ஆலயத்தை வலம் வரும்போது, அங்குள்ள வட்டப்பாறை நாச்சியார் என்னும் காளிமுன் சென்ற போது, கொலைப் பூசை நடப்பதென்ற செய்தி யறிந்தனர்.

**ஒற்றியூர்க் காளீ ! உனக்கேனோ ? ஊன்விருப்பம்**
**வெற்றிமுழு வோன்விருப்பு வேண்டாமோ-சிற்றுயிரைக்**
**கொல்வார்க்கும் இன்பம் கொடாதான் அவனகண்டாய்**
**நல்வார்த்தை சொன்னேன்இந் நாள்.**

என்னும் வெண்பா ஓதினர். இது போன்று, கோயில்களிலும், பிற இடங்களிலும் உயிர்க் கொலை செய்வதை அறவே நீக்க வேண்டுமென்பது இவருடைய பேரவா. "**கோவிலெங்கணும் உயிர்க் கொலையற்ற பூசையே குவலயத்திடை நடக்க**" என்பர் வேறோர் நூலில். மயிலாப்பூர் இறைவன் மீதும், திருவள்ளுவர் மீதும் பதிகம் பாடித் துதித்தனர்.

## 10. முருகப் பெருமான் முற்பிறப்பு உணர்த்தல்

சிலநாள் கழித்துத் திருநெல்வேலி சென்று தங்கிய சமயம் ஒரு நாள் முருகன் இவர் நிட்டையிற் காட்சி வழங்கினர். அதில், தாமிரபரணி ஆற்றின் நடுவில் உள்ள ஆலயத்தின் தென்புறம் உள்ள மணல் மேட்டின்கண், முருகப்பெருமான், வெண்ணீறு பூசிய செந்நிற மேனியும் சிவந்த கல்லாடையும் அணிந்து குருவடிவில் அமர்ந்திருந்தனர். வீரவாகுதேவர் முருகன் அருகில் வணங்கி

நின்றனர். இவர் அதைக் கண்டு மகிழ்ந்தனர். வணக்கம் செய்யாமல் அவரது மடியில் சுவாமிகள் அமர்ந்தும் அவர் கழுத்தில் கைகளைக் கோர்த்துக்கொண்டும் இருந்தனர். அப்போது சுவாமிகள், நான் முற்பிறப்பில் யார் எனவினவியபோது பெருமான் மனமகிழ்ந்து, "**நீ, நமது அருணகிரியே**" என்றனர்: அதற்கு இவர், அருணகிரிநாதர் முத்தியடைந்ததாக உலகமக்கள் கூறுகின்றனரே என்றனர். முருகன், அது அப்படித்தான் (என் சொற்படி தான், முத்தியடைந்ததும் தான்) என்று இரு பொருள்கொள்ளும் படி, உறுத்திக் கூறினர். நினைவு வந்தது. உடன் ஒரு கவி எழுதினர்.

> "வல்லைவந் தன்பரைக் காக்கும்செவ் வேற்கை வரதனைக்கண்(டு)
> எல்லையில் லாக்களிப் பாய்மடி மீதில் இருக்கு மென்னைத்
> தொல்லை அருண கிரிதான்என் றன்னவன் சொன்னதுண்மை
> இல்லையென் றுற்குமுக் கென்றுவெங் கோடை இடிவிழுமே"

என்பதாம். பின் திருவருளைக் கருதி, திருநீறணிந்து துயில்வதானார். அதுபோலவே முருகன் தோன்றி இடிவிழுமென்ற சொல், *மூவிடங்கட்கும் ஒக்கும் என்றோதி மறைந்தனர். மீண்டும் பல இடங்களில் இவ்வித அருளுரை கேட்டனர். ஆதலின், திருவருணைத் தலம் சென்று, தங்கித்தவம் புரிந்தால் நலமென்று கருதி அவ்விடம் சென்றனர்.

## 11. அருணையிற் றங்கி ஆயிரம் கவிசொலல்

திருவண்ணமலையில் ஈசானிய மடத்தில் சில நாள் தங்கினர். முருகன் இவரது மன வெளியில் தோன்றி நீ, நமது கோபுரத்துக்கு வருக என்றனர். மறுநாட் காலை அண்ணமலையார் திருக் கோயில்முன் இரண்டா

* மூவிடம்—தன்மை, முன்னிலை, படர்க்கை என்பன.

வத்தான வல்லாளன் கோபுரத்தினைச் சென்றுபார்க்கும் போது, அருணகிரி நாதருக்கு அருள் செய்த முருகன் (கோபுரத்து இளையனார்) சந்நிதியில் நேர் வாயில் சுவர் வைத்து மறைக்கப்பட்டும், பூசனையின்றியும், துரிஞ்சல் நிறைந்தும் இருந்தது. அதுகண்டு மனம் வருந்தினார். அன்பர்கள் உதவி கொண்டு சுவரை எடுத்து, புனிதப் படுத்தி, வழிபாடுகள் செய்து, தமது வேலாயுதத்தைச் சாத்திப் பதிகம் பாடினார். **சகத்திர தீபம்** என்ற ஆயிரம் பாடல்கள் உள்ள நூலையியற்றி னார். வெளவால்களைப் போக்கி விளக்கொளி யமைத் தனர். (இவர் அணிவித்த வேலாயுதம் இன்றும் கோபுரத்து முருகன் அணிந்துள்ளதைக் காணலாம்.)

**சோறிட்ட கையினர் வாழ்அரு ணைபுரித் தொல்சிகரிக்**
**கூறிட்ட தான வடபாதிக் கோயிற் குருபரனே**
**சீறிட்ட வாவற் குலமோட ஆயிரந் தீபம் வைப்பான்**
**நீறிட்ட மேனியும் தண்டமுந் தோன்றமுன் நின்றருளே.**

எனக் கூறினார். சில காலம் தங்கி அண்ணாமலை யார், உண்ணாமுலையம்மை ஆதியர்க்கும் பதிகம் முதலிய நூல்கள் பாடினார். அழுக்காறு கொண்ட சிலர் வாதிட்டனர். உடலிலும் பொடிப்பு நோய் வந்தது. அதனால் மனம் நொந்தனர். தாம் வசித்த மலைக்குகை யருகில் புலி வந்து சென்றது. ஊறு நேராதவாறு முருகன் காத்ததை உணர்ந்தனர்.

**கோதுபடாத் தென்அருணைக் கோபுரத்து வேள்உறவு**
**போதும்போ தும்போதும் போதுமே-வாதுசெயும்**
**பொல்லார் பகையும் பொடிப்புநோ யுங்கொடுத்தான்**
**நல்லான்ஆ றுற்பார்க்க லாம்**

என்றோதி மீண்டனர்.

## 12. கழுகுமலையிற் காணும் அருட்செயல்

முருகன் தலங்களில் ஒன்ருன கழுகுமலை சென்றனர். அந்த மலைக்குகன்மீது பாடல் இயற்றித் தங்கியிருந்தனர். மலைமீது தங்கித் தவம் புரியும் அந்தணத் தவசியின் கனவில் பெருமான் விளங்கி, அடிவாரத்தில் இருந்து என்மீது கவிபாடும் அன்பன் முற்பிறவியில் அருணகிரியாயிருந்தவன். பாடுவதால் அவன் உடலின் சூடு தணியும் படி, நீ உபயோகிக்கும் பனங்கற் கண்டில் ஒரு பகுதி உதவுக என்ருேதினர். அதனையறிந்த தவசி, மலைவிட்டு இறங்காத நியதி உடையவர், பனங்கற் கண்டினை எப்படியோ வரவழைத்துப் பிறர் அறியாமல் உண்பவர். எப்படி உதவுவதென்று எண்ணியிருந்தனர். அந்நாளில், இயல்பாகவே இவர் மலையேறி முருகனை வணங்கிய பின்பு, அவரையும் காணநினைத்தனர். சென்றபோது, அவர் மகிழ்ந்து விவரம் கூறிக், கற்கண்டு உதவினர். சுவாமிகள் வியந்து பெற்றுக் கொண்டனர்.

அவ்வாறு இருக்கும் போது, ஆறுபிரபந்தம் இயற்றினர். அப்பதியில் உள்ள, இராம கிருட்டிணப் பிள்ளை யென்பவர், சுவாமிகளிடம் அன்பு பூண்டு உபதேசம் பெற்றனர். சந்தக் கவி எளிதில் இயற்றும் புலமை உண்டாக அருளினர். அவர் செய்த சந்தப் பாடலின் அருமையுணர்ந்த சுவாமிகள்,

> "என்னுவில் உற்ருட்(கு) இராமகிட்டி ணப்புலவன்
> தன்னுவில் உற்ருள் சகோதரியோ-பொன்நாணும்
> புத்திரியோ தோழியோ போலும்உரு வத்தினளோ
> எத்திறத்தா ளோஅறிகி லேன்."

என்ற பாடலோதி ஆசி கூறினர்.

அவ்வூரில், பேய்பிடித்த பெண் ஒருத்தி இவரிடம் வந்து விலகும்படி செய்ய வேண்டினள். தமது வழி பாட்டில் முருகனை வேண்டினார். திருநீறு உதவ எண்ணிக் கையில் எடுத்தனர். பெண்மீது பேய் வந்து, மற்றைய பேய்போல எளிதில் விலகேன், உன்னைப் போல நானும் முருகன் வழிபாடு உடைய வன்தான் என்றது. வினவிய இவர், விபூதியை மேலே தூவி, பூசையிலிருந்த பிரம்பினால் பேயை அடித்தனர். அப்போதே விலகியது. ஆயினும் ஒவ்வோர் சமயம் வருவதாயிற்று. முருகன், அந்தப் பேய் சம்பந்தமாக அதிக முயற்சி செய்யற்க; அதன் போக்கில் விடு, என்றனர். அதனால் மனம் வருந்தி அவ்வூர்க்கெனப் பாடிய பாடலுள்ள ஏட்டுச் சுவடியைக் கிழித்து, குளத்தில் போட்டு, நெல்லைக்கு வந்து சேர்ந்தனர்.

## 13. சேய், பன்னீரிலைத் திருநீறருளல்

திருநெல்வேலி மாவட்டத்தில் பொதியை மலை யின் அடிவாரமான பாபநாசம் என்ற தலம் சென்று, தாமிரபரணியாற்றில் நீராடி, திருநீறு, அக்கமாலை யணிந்து, கல்லாடையுடுத்து, இறைவனைப் போற்றி னர். கலியின் கொடுமை தீரவும், நல்லோர் மகிழவும், தீச்செயல் மாறி, நற்செயல் மலியவும், மக்கள் புனித உணவுண்டு வாழவும் கருதி, பொதிய மலையின்மீது ஒரு குகையில் இருந்து, இருகரங்களையும் சிரசின்மீது கூப்பி, ஆறெழுத்து மந்திரத்தைச் செபித்து, தண்ட பாணிக் கடவுள் வடிவை நினைத்துத் தியானம் செய் திருந்தனர். அப்போது ஒரு காட்சி மனக்கண்முன் கண்டனர்.

தமது தூலவுடம்பினுள் உள்ள வெளியே, அண்ட வெளியாகி அதனுள், கடல், பூமி, மலை, சூரிய சந்திரர், உடுக்கள், மற்றைய பொருள்களும் காணப்பட்டன. அதோடு தாமும் இருப்பதறிந்தனர். முருகனை வணங்கும் அன்பும், வைராக்கியமும் அதிக மேற் பட்டது. கீழ்க்கண்டவாறு அப்போது நினைக்கலானூர்.

நாம் திருமலை மீதேறி உயிரை வெறுத்து உருண்ட போதும் முருகன் முன் வரவில்லை. இனியும் உடல் வைத்திருப்பது கூடாது. இன்னும் ஒரு தடவை ஏறி உருண்டு இறப்பது மேல் என்றெண்ணினர். மலையை நோக்கித் துணிந்து சுவாமிகள் செல்லலானூர். அக் கால், ஆகாயத்தில் மயிலைப் போலச் சிகையமைந்த ஒரு பறவை, கருடன் போல வட்டமிட்டது. இது பிரமன் படைப்பன்று. தெய்வீக வடிவு என்றெண்ணினர். வணங்கினர். அவ்வுருமாறி, வேலைக் கையிலேந்தி, முழுநீறும், கோவணவுடையும், உள்ள தவக்கோலத் தில் அதுபோல வட்டமிட்டனர் முருகன். அதிமகிழ் வுற்றுப் பணிந்தனர். தம்முடன் வந்து அமரும்படி வேண்டினர். அப்படியே அருகில் வந்தனர். "நினது விருப்பம் யாது" என்றனர். உடனே "சருவபிர சாதம்" என்று கூறினர். தவசி வடிவிலிருந்த முருகன் பசுமையான பன்னீர் இலையில் பொதிந்த திருநீற்றினை சுவாமிகட்கு நல்கி மறைந்தனர். இச் செய்தியை, தமது அநுபூதிவரலாறுன குருபரதத்துவத்திற் கூறு கின்றூர் சுவாமிகள்.

"வந்துநின்று நின்விருப்பியா தெனக்கேட்டான்
அதைக்குறித் தென்மனம் நாடாமுன்
செந்துவர்வாய் சருவபிர சாதமெனச்
சாற்றியதச் செயலென் னேயோ



இந்துறழ்வாள் செயலோஅன்ன வனசைவோ
இன்னதென இன்னந் தேறேன்
தந்துமறைந் தனன்அதுதான் பன்னீர்ப்பச்
சிலையில்வைத்த தவள நீறே."—என்பதாம்.

## 14. அறுவகை யிலக்கணம் அருளிச் செய்தல்

தமிழ் மொழிக்குரிய எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, என்னும் இலக்கணங்கள் ஐந்துடன் அவற்றை ஒருங்கு உணர்ந்தார்க்கு, உறும்பயனாகிய புலமைக்குரிய இலக்கணமும் சேர்த்து, சுவாமிகள் **அறுவகையிலக்கணம்** என்ற அரிய நூல் ஒன்று (786) சூத்திரங்களில் ஓதினர். அதனில், முன்னோர்களது இலக்கணங்களில் விளக்காத சில முக்கியக் குறிப்புகளை விளக்கியுள்ளார். அந்த இலக்கண நூலை அரங்கேற்ற எண்ணிப் பத்திரிகை வெளியிட்டனர். திருவருமா மலைக் கோயில் முகப்பு மண்டபத்தில் பல புலவர்கள் சூழ அரங்கேற்றக் குறித்த நாளில் சபையில் வரும் வினுக்கட்கு உரிய விடைகூறும் தீரத்துடன் செல்க என்ற செய்தியை உள்ளூர்ப் புலவர்கள் சிலர் அழுக்காற்றால் இவரிடம் சொல்ல விடுத்தனர். அதற்குப் பதிலாக ஒரு பாட்டினை எழுதியனுப்பிவிட்டு, தாம் சபைக்குச் சென்றனர்.

" ஓதுவார் கவிராயர் எனும்பெயரே மலையிலக்கென்
றுன்னி வாழ்வீர்
வாதுபா டத்துணிந்து வரவேண்டாம், வருவீரேல்
வண்ணப் பாட்டு
காதுதான் வேண்டுமென்று கடிக்கவரும் இதுபழமை
கண்டீர் எங்கள்
மோதும்வேற் குருபரன்றன் முழுதுணர்ந்த புலவனெனு
மொழிபொய் யாதே "

என்பது அத்தனிக் கவியாகும்.

அதைக் கண்ட புலவர்கள் வியப்பும், மகிழ்ச்சியும் பெருக, சபைக்குவந்து முழுதும் வினவிச் சிறப்பித்தனர். பலவண்ணமும், திருப்புகழ்களும் அரங்கேற்றினர். சந்த யாப்புக்கென, தனியே இலக்கணம் இது வரையில்லா திருந்தது. **தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தன்ன, தய்ய** என்ற எண்வகையும், **தத்தா தாத்தா** முதலியனவும், **தத்தன, தந்தன** போன்ற ஒன்றரைச் சந்தங்களின் விவரமும் துலக்கி, நூறு சூத்திரங்களால், "வண்ணத் தியல்பு" என்ற பெயரால் அமைத்துத் திருப்பரங்கிரியில் முருகன் சந்நிதியில் அரங்கேற்றினர். சோழவந்தான் கந்தசாமி சுவாமிகள் என்பவர் அங்கு வந்து இவரது அன்புக்குரியவராய்த் தொடர்பு கொண்டார்.

## 15. பேத வைணவர், இவர் பெருமையறிதல்

நெல்லையம்பதியிலிருந்து வடதிசை நோக்கிப் புறப்பட்டு பல தலங்கள் தெரிசித்து வருகையில், திருஅயிந்திரபுரம் என்னும் விட்டுணு தலத்தை யடைந்தனர். சந்நிதியில் தெரிசிக்கச் சென்றனர். இவர் எந்தப் பெயரும் வடிவும் கடவுள் ஒன்றிற்கே உரியது. அறுவகைச் சமயமும் ஒரே தன்மையினது என்ற அநுபவம் கைவந்தவர். ஆதலின் அவ்வித அறு சமயக் கடவுளரையும் சமமாகத் துதி செய்பவர். அதற்கேற்ப அறுசமயக் கோலமும் தமது மேனியில் அணிவதானார். உடல் முற்றும் தூளனமாகத் திரு நீறு பூசி, இருதோள்களிலும் இரண்டு கலை நாமங் களையும் அணிவர். துளசி, அக்கமணிமாலை புனைந்திருப் பர். அத்தலத்துள்ளவர் வடகலைக்குரிய அந்தணர்.

இவரைக் கண்டதும் வெறுப்புக் குறிப்புடன் நோக்கினர். கோயிலுட் சென்று வணங்கி மீளும் இவரைக் கண்டு கோபுரவாயிலிலிருந்து எங்களுக்கு ஏற்பட்ட வினவுக்கு விடை கூறுக என்றனர். நேர்மையுடன் கேட்பவைகட்குப் பதில் கூறுவதாய்ச் சுவாமிகள் கூறினர்.

"எங்கள் வடகலையை இடது தோளில் ஏன் அணிந்தீர்கள்" என்றனர். அதற்கு இவர் இரண்டு வினுக்களை விட்டு, மூன்ருவதான வினவைத் தானே கேட்டீர்கள். ஆதலால் உங்கள் மனதில் விபூதியின்மீது உள்ள வெறுப்பைவிட, அதிக வெறுப்பு தென்கலையின் மீது உள்ளதையறிந்தேன் என்றனர். 1. விபூதி பூசி. அதன்மேல் நாமம் இட்டதைப் பற்றியும், 2. நெற்றியில் அணியாதது பற்றியும் வினவாமல், 3. இடது தோளில் நாமம் இட்டதைப் பற்றிக் கேட்டதனுல் அறிந்தேன் என்றனர். வைணவர்கள் அதையும் கூறுக என்றனர். ஒரு நாராயணனது லீலா வடிவமே பத்து அவதாரங்களென்பதை ஒப்புகின்றீர்கள். அதுபோல, ஒரே பரம் பொருளின் லீலா வடிவமே சமயங்கள் ஆறும் என்றறிந்தேன். ஆதலால் திருநீறு, திருமண் இரண்டையும் சமமாகத் தரித்தேன். அன்றியும், நாம் கிழக்கு முகம் நோக்கியே எதுவும் செய்வது மரபு. அப்போது வலக்கை தென்புறமாவதால் தென்கலையை வலத்தோளில் இட்டேன். இடது தோளில் வடகலையை, வலது கையால் தரித்தேன். நெற்றியில் ஏதோ ஒன்றைத்தான் அணிய வேண்டும். அப்படியானுல் அரை வைணவனுவேன். இரண்டு நாமக் குறிகளும் சமம் என்றறிந்த நான் அப்படியணியேன். உலகமெல்லாம் உண்டுமிழ்ந்த நாராயணன் இந்த

**பேதவாதத்திற்கு அமைய மாட்டான்**" என்பதுபோற் பல விதமான நியாயம் கூறினர். அவர்கள் சமாதானமானுர்கள். சந்நிதியிற் சென்று பிரசாதம் வழங்கினர். தேவநாதப் பெருமாளுக்குப் பதிகம் பாடினர். பின் வேலூர் சென்று அவ்வூர் முருகன் மீது துதிபாடித் தங்கியிருந்தனர். அங்கு, ஒரு வேளாளனும் அந்தணனும் வலியவந்து, இவரிடம் வடமொழி உயர்வென்று வாதிட்டனர். அவர்கள்,

## 16 தமிழ்மொழி உயர்வெனத் தர்க்கத்தில் வெற்றி

வேதம் வடமொழியில் தோன்றியதென்றனர். தமிழிலும் வேதம் உண்டு. ஆனல் ஆட்டைவதைத்து ஊன் அவிபெய்து உண்ணும்படி தமிழ் வேதம் கூறவில்லை என்றனர் சுவாமிகள்.

> **" அவிசொரிந் தாயிரம் வேட்டலின், ஒன்றன்**
> **உயிர்செகுத் துண்ணுமை நன்று."**—என்பது தமிழ்மறை.

உமது தமிழ்மொழி அக்கர லோபத்தினது என்றனர் அவர்கள். இவர் எகரம், ஒகரம், இன்னும் ற. ன. ழ. ஆதியவும் வடமொழியில் இல்லையாததால் அதுவும் அத்தகைத்தே என்றனர். இப்படி வாதம் சமமாகி, இரவு முற்றும் இருந்தது. பின் இருதரத்தினரும் ஒருமித்துத் திருவுளச் சீட்டுப் போடத் தீர்மானித்தனர். தமிழ், வடமொழி, இரண்டும், காலம், நாடு, குலம், மானம், என்றவாறு ஏழுசீட்டெழுதி, வேலாயுதத்தின் முன்பு இட்டு, சிறு கன்னிகை மூலம் எடுப்பித்தனர். **தமிழே உயர்ச்சி** என்ற சீட்டு எடுக்கப்பட்டது. அவர்கள், நீங்கள் வணங்கும் தெய்வம் உங்கட்கிசைந்த முடிவைக் கொடுத்தது என்றனர். அது வினவிய

தண்டபாணி சுவாமிகள், நாததத்துவம் கடந்த பரம் பொருள், எனக்குச் சொந்தமான தென்றல், எனது கொள்கையே சிறந்தது என்று கூறி, அந்தச் சீட்டைத் தலையில் தரித்து கண்ணினும் ஒற்றி மகிழ்ந்து வாயி விட்டு மென்று உண்டனர். "**தமிழே உயர்ச்சியென்று சீட்டுக் கொடுத்த பெருமாளே**" என்று ஒரு திருப்புகழ் பாடினர். அதன் பின் "தமிழலங்காரம்" என்ற நூல் நூறு கட்டளைக் கலித்துறைகளால், பல வரலாறுகளைச் சான்று கூறித் தமிழ்மொழிக்குச் சிறப்புக் கூறி யுள்ளார்.

> **"தமிழ்மொழிக் குயர்மொழி தரணியில் உளதெனில்**
> **வெகுளியற் றிருப்போன் வெறும்புல வோனே"**

என்பது இவரியற்றிய அறுவகையிலக்கணத்தில் ஓரிடத்துக் கூறுவதால், இவரது தமிழ் அபிமானம் நன்கறியலாம். எடுத்துக் கொண்ட வாதத்திற் கேற் பவும் உண்மையுமாகப் பாடியதன்றி, வடமொழியை இழிவுபடுத்தும் நோக்கமில்லை. வடமொழிக் கலப் பின்றி, தனித்தியங்கும் ஆற்றலுடையது தமிழ். மொழி வெறிகொண்டு தூற்றுமல் இன்றியமையாத போது வட சொல்லையும் சமத்துவமாகக் கொண்டு கையாளலாம். என்பதை, தேவகோட்டைத் திருப்புகழ் ஒன்றில் "வடமொழி கலந்திடாத-தமிழென விளங்கு பாடல்" என்றிவர் கூறுவதால் அறியலாம்.

## 17. திருச்செந் தூரில் திருவருள் ஆடல்கள்

முருகப்பெருமானுக்குரிய தலங்கள் பலவற்றினும் முதன்முதலாகப் பூலோகத்தில் முருகன் தங்கியதலம் திருச்செந்தூர் ஆகும். அங்கு, திரிலோக சுதந்தரர்

என்னும் வேதியர் சிறந்து விளங்குவர். அத் தலத்துக்கு அடிக்கடி சென்று கந்தபுட்கரணி, நாழிக்கிணறு, கடற்றுறையான "வதனாரவிந்தம்" இவ்விடங்களில் நீராடி, சண்முக விலாச மண்டபத்திற்றங்கி, முருகக் கடவுளைப் போற்றிப் பணிவர் தண்டபாணி சுவாமிகள். அத்தலத்து அந்தணர்களும் இவரை அன்புடன் ஆதரித்தனர். அவ்வூரில், கோவிந்த ஐயரென்பவர், முருகதாசர் கவிகள் அதிக இனிமையாய் அமைந்தவை ஆதலின், அவற்றைத் தமது வழிபாட்டில் பாராயணத்துக்கு அமைத்துக் கொள்ளலாமா, கூடாதா என ஐயுற்றிருந்தனர். அவரது கனவில் செந்திலாதிபன் தோன்றி, "எனது அன்பனாகிய முருகதாசனது கவிகளைத் தடையின்றிப் படிக்கலாம். அவன் சாமானியன் அன்று. அகத்தியனோடு ஒப்பாவான்" என்று கூறக் கேட்டனர். அதுமுதல் தினவழிபாட்டில் படிப்பதானார் கோவிந்த ஐயர்.

மற்றொருநாள் பெருமான் முருகதாசர் முன் தோன்றி, நீ என்மீது பதினாறு பனுவல்பாடுக. பன்னிரண்டு எனக்கு, வள்ளி, தெய்வ யானைக்கு ஒவ்வொன்று. வீரவாகுக்கு இரண்டு என்றும் பதினொன்றும் பனுவல் பாடும் போது நமது கந்தலோகத்துத் திருநீறும், உருத்திராக்கமும் உனக்குத் தருவோம்" என்றும் ஓதினர். திருநெல்லை சென்று, வைகாசி மாதம் வருக என்றும் கூறினர். அவ்வாறு சுவாமிகள் சென்று, பாடத் தொடங்கினர். பத்துப் பிரபந்தம் பாடினர். பதினொன்றாவது "கந்தமாலை" என்ற பனுவல் பாடி முடித்தனர். முருகன் செய்த உத்தரவுப்படி வழங்கவில்லை. சுவாமிகள் மனதில் ஊடல்

உண்டாயது. பாடிய பிரபந்தங்கள் பதினொன்றையும் கிழித்துத் தாமிரபரணியாற்றில் விட்டனர். அதுமுதல் பாடல்களே பாடாமல், தியான செபம் மட்டும் செய்து வந்தனர்,

சிலகாலம் கடந்த போது, முருகன் சொன்னபடி பதினாறு பிரபந்தங்களும் பாடி முடிக்காமல், அவசரப் பட்டுக் கிழித் தெறிந்தது தவறு என்றெண்ணினர். வைகாசிமாதம் செந்தூர் சென்று தங்கி, முருகனைச் சிந்தித்துப் பதினாறுவகை நூல்கள் பாடினர். அவை **1. வெண்பா அந்தாதி. 2. சிலேடை வெண்பா. 3. திரிவந்தாதி. 4. யமக அந்தாதி. 5. பதிற்றுப்பத் தந்தாதி. 6. செந்திநாயக சதகம். 7. உலா. 8. நவ ரசமஞ்சரி. 9. அகப்பொருட் கோவை. 10. தசாங்க வகுப்பு. 11. கௌமாரவிசயம். 12. சந்தமாலிகைத் திருப்புகழ். 13. குஞ்சரிமாலை. 14. வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ். 15. வீரவாகு வாளலங்காரம். 16. ஷை வண்ணப் பதிகம்,** என்பவைகளாம். இப்படிப் பாடி ஏட்டில் அழகுற எழுதி முடித்து, மைக்காப்பு இட்டு, அரங்கேற்றும் நாளை வகுத்துப் பத்திரிகை வெளிவிட் டனர். இச்செய்தியறிந்த புலவர், பத்தர், செல்வர், தவசிகள் வந்து குழுமினர். குறித்த நாளில், யானையின்மீது பிரபந்த ஏட்டுச் சுவடியை ஒரு பீடத் தில் வைத்து அலங்கரித்து, இன்னிசையுடன் நகர் வலம் வந்து சந்நிதிமுன் சேர்ந்தனர். முருகன் திருவடியில் ஏட்டுப் புத்தகத்தை வைத்து வழிபாடு முடித்தபின் பெற்று சண்முக விலாச மண்டபத்திற் கூடிய பேரவையில் படித்துப் பொருள் கூறினர். பிரபந்தம் பதினாறு ஆனது போல பதினாறு நாளில்

அரங்கேற்றினர். சபையிலிருந்து பொருளைக் கேட்ட பெருமக்கள் பெரு மகிழ்வுற்றனர். அருச்சகர் இலைத் திருநீற்றுப் பிரசாதம் வழங்கினர். எவ்வளவோ சிறப்பிருந்தும் முருகன் ஒருவித அருளாடலைச் செய்யாமலும், பொருட்பேறு வழங்காமலும் இருக்கும் விதம் நினைத்து மனம் புழுங்கினர். அன்றிரவு சுவாமிகள் மனக்கண் முன் தோன்றி, " உன்னைப் போல் நானும் முருகன் அடிமை தான். ஆனால் உன்னை விடச் சற்று பெரியவன் " என்று கூறினர். அவ்வித உத்தரவைக் கேட்டு, சமாதான உள்ளத்துடன் செந்தூரை விட்டுத் திருநெல்வேலியை அடைந்து தவம் புரிந்திருந்தனர்.

> " யானும்வேல் முருகன் ஆளே என்னில் நின் றன்னிற் சற்றே
> வேனுறும் பெரியன் என்ருன் ; வெட்கம்ஓர் சற்று மின்றி,
> தானுரைத் திடுமம் மாற்றம் சரதமா னலும் தாழும்
> நானுவப் புறஏ தேனும் நல்கிடக் கடன்உண் டம்மா.
>
> —குருபரதத்துவம், திருச்செந்தூர்ச் சருக்கம்.

## 17. புதுவையில் வாதம் புரிந்தவர் தோற்றல்

ஒருநாள் தமது வேலாயுதத்துக்குச் சிறப்புப் பூசனை செய்யும் பொருட்டு, அலங்காரப் பந்தல், வேள்விச் சாலை, பூசனைப் பீடம், அட்டிற் சாலை முதலியவை பெருமளவிற் செய்தனர். ஐங்கருவிகள் ஆர்த்தன. பூசனை தொடங்கும் சமயம். திடீரென்று நீருண்ட கருமேகம் சூழ்ந்து வானம் அளாவப் பெரு மழை பெய்யும் தோற்ற மேற்பட்டது. அன்பர்கள் யாரும் நெஞ்சம் பதைத்தனர். இவ்வளவு சிறப்பும் பயனற்று விடுமோ என்று பலரும் பேசினர். இது வினவிய சுவாமிகள் முருகன் மீது பொறுப்பினை

ஏற்றி, இன்றைத் தினம் இப் பூசைக்கு இடையூருக மழை சிறிது பெய்யுமாலுைம் உடனே பூசனையை நிறுத்தி இவ்வளவு சிறப்பையும் நானே அழிப்பேன் என்று கூறி, வேலாயுதத்துக்கு முன் இருந்து தியானித்தனர்.

சற்று நேரத்துக் கெல்லாம் ஒரு பெருங் காற்று எழும்பி மேகத்தை நாற்றிசையும் கலைத்தது. மகிழ்ந்தனர். பூசையை இயற்றினர். பல தடவை பல சமயங்களில் வேண்டியும் காலம் கடத்திக் கொண்டிருந்த முருகப் பெருமான், இந்த அலங்காரத்தை அழிக்கக் கூடாது என்று துணிந்து மழையை நிறுத்திப் பூசையை ஏற்று மகிழ்வித்தது வியப்பாகும். அந்தப் பூசையால் கடன் ஏற்பட்டு, அக்குறை தீரவிரும்பி, புகைவண்டியேறிப் புதுவை நகரைச் சேர்ந்தனர்.

அந்நகரத்தில் பல அன்பர்கள் சூழ விளங்கிய, சண்முக சுவாமிகளைக் கண்டு பணிந்து உறவு பூண்டிருந்தார். அழுக்காறகன்ற அன்பினரான கண்ணுவ ஐயரென்னும் அந்தணர், இவரைச் சந்தித்தும், பாடல்களைக் கேட்டும் பேரின்ப மடைந்தனர். அன்றியும், அவ்வூரில் மக்களின் தலைவராய் விளங்கிய தானப்ப ஆசாரி என்பாரிடம், கண்ணுவஐயர் தண்டபாணி சுவாமிகளைப் பற்றிப் பெரிதும் கூறி, அவரை நேரிற் காணுமாறும், தக்க சிறப்புச் செய்யுமாறும், வேண்டினர். ஆசாரியார், இவரைத் தமது இல்லத்துக்கு வரும்படி பணிந்து வேண்டி வழிபட்டனர். இசைவு அறிந்து அழைத்தேகி உபசரித்தனர். திருநீறு பெற்று இருப்பிடம் கொண்டு விடுத்தனர்.

அப்பதியில் விளங்கும் வேதபுரீசர் கோயிலில் உள்ள முருகப் பெருமானுக்கு, முப்பத்தாறு திருப்புகழுடைய ஓர் நூலியற்றினர். அன்றிரவு இவர் நிட்டையில் முருகன் தோன்றி, எனது முகங்களில் ஒன்றே மகிழ்ந்தது. மற்றவையும் மகிழும்படி ஐந்து நூல் இயற்றுக என்றும், பாடினுலன்றி விடேன் என்றும் ஓதினர். சுவாமிகள், அலங்கார பஞ்சகம், கலம்பகம், பிள்ளைத் தமிழ், பாதாதிகேசம், பதிற்றுப் பத்தந்தாதி என்ற ஐந்துபனுவல் இயற்றி, ஏழாவதாக, நொண்டிச் சிந்து என ஒன்றும் பாடி முடித்தனர். அவற்றை யெல்லாம் சுவாமிகள் முருகன் சந்நிதியில் சிறப்புடன் அரங்கேற்ற விரும்பினர். தானப்ப ஆசாரியார் மூலம் பத்திரிகை பதித்து வெளியிட்டனர்.

குறிப்பிட்ட நாளில் பலரும் கூடினர். ஒரு சில அன்பர்கள் இவரிடம் வந்து, சபையில் தடுத்து, வாது புரியச் சில புலவர் திட்டமிட்டுள்ளனர் என்று உளவு கூறி கவனமாயிருக்க வேண்டுமெனவும் அறிவுறுத்தினர். இவர், எனது உள்ளத்தில் உள்ள தலைவன் முருகன், அவன் திருவுள்ளப்படி நடக்கும், நாம் அது பற்றி அஞ்ச வேண்டுவது இல்லை என்று கூறி, சிந்தனையுடன் சென்று முருகன் திருவடியில் ஏடு சாத்தி, வணங்கிப் பெற்றுச் சபையில் அமர்ந்தனர். அழுக்காறு கொண்ட புலவர்கள் எதிர்ப்புறம் இருந்தனர். காப்புக் கூறி ஒவ்வொன்ருகப் படித்து அரங்கேற்றி வந்தனர். கலம்பகத்தில்; மறம் என்னும் உறுப்பு கூறும் கவியில், ' ஓர் அரசன் ஒரு தூதன் மூலமாக, மறவர் குடியிற் பிறந்த ஒரு பெண்ணைத் தனக்குத் தரும்படி கேட்டு தூது அனுப்புதலும், அதற்கு

அம்மறவர்கள் மறுத்துக் கூறலும் அமைத்து, பாட்டுடைத் தலைவன் ஊர்பெயர் பொருந்தக்கூறுவது மரபு. அதுவு மன்றி, மரப் பொருளில் அமைய இருபொருள் (சிலேடை) விளங்கவும் அமைப்பதுண்டு. அம்முறையில், “ நின் அரசு வெம் கவளம் உண்ணும் அத்திமீது வரினும் வெட்டி நீள் சமர்க்–களமதிற் கிடத்துவோம்” என்று பாட்டிலமைத்ததை வினவியபுலவர், மரப் பொருளில் அத்திமரத்துக்குக் கவளம் உண்ணுதலாகிய சிறப்பு எவ்விதம் பொருந்துமென்றனர். அதுகேட்ட மறுகணமே, சுவாமிகள் அரச மரமானது பெண் கேட்பது கூடுமாயின், அத்திமரம் கவளம் உண்ணும் என்று கூறினர். அம்மட்டில் அனைவரும் வியந்து பாராட்டினர். அமைதியுற்றனர்.

அந்தச் சபையில் இவர் பாடலைக் கேட்டறிந்த, சண்முகம் செட்டியார் என்பவர், சுவாமிகளை வணங்கி, சுவாமிகளுக்குப் பொருளைக் கொண்டு ஆக வேண்டிய திருந்தால் சொல்லியருள வேண்டுமென்று கேட்டனர். திருநெல்வேலியில் பூசனைக்கென நான் கொண்டுள்ள கடனைத் தீர்த்தல் போது மென்றனர். செட்டியார் உடனே போதிய அளவு பொருள் உதவி அஞ்சல்மூலம் கடனை நீக்கினர். அக்கால், தானப்ப ஆசாரியாருக்கு, சுரநோய் கண்டிருந்தது. அது தீரும்படி முருகனை வேண்டித் திருநீறளித்தனர். உடன் தீர்ந்தது. அவர் மகிழ்ந்து ஒரு பெருந்தொகை, சுவாமிகட்குக் காணிக்கையாக உதவினர். அதை ஊதியமாகப் பெறாமல், அவ்வூர் முருகப் பெருமானுக்கு வசந்த விழாவைச் சிறப்புடன் செய்வித்து, அன்பர்கள் அனைவரும் மகிழும் படி செய்தனர். அப்போது இவரால் தொடங்கி நடத்

தட்பட்ட அத்திருவிழா இன்றும் சிறப்பாக நடக்கிறது. சந்தனம் அதிகமாக அபிஷேகம் செய்ய ஏற்படுத்தினர்.

## 18. முருகனுக்கு 18 கண் உண்டென்றதில் விவாதம்

புதுவையில், முருகன் மீது பாடிய பதிகம் ஒன்றில் " **மூவாறு கண் உடைய முருகவேளே** " என்ற மகுடம் அமைய ஓர் பதிகமியற்றி அரங்கேற்றினர். அது கண்டு மதவாதப் புலவோர் சினங் கொண்டு மறுப்புக் கூறினர். முருகனுக்குக் கண் பன்னிரண்டே என்றனர். சுவாமிகள் " பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும்" என்று அப்பர் சுவாமிகள் ஓதிய வாக்கைக் கொண்டு பேசுவார் பலர். அது பொது. அக்கினிக்கண் மூலமே பிறந்த முருகன், இரண்டு கண்ணுடனிருப்பது எப்படி? வடமொழிக் காந்த புராணத்தில், " **திரிஷட்ஈட்சணம், அஷ்டாதச விலோசனம்** " என்றெல்லாம் கூறப்பட்டுள்ளது. திருச்சிற்றம்பல நாடிகள் செய்த, திருச்செந்தூர் அகவலினும் முளரிமுந் நான்கும், மூவிரு குமுதம்-பொரும் அறு விழிகளும் எனக் கூறியுள்ளார், என்று கூறித் தெளிவித்தனர். கந்த புராணத்தும் ஒரிடத்து " **அழலெழ விழித்து.**" என்று குறிப்பிற் கூறினர். ஏனோ வெளிப் படக் கூறினரில்லை. சென்னை பாம்பன்-குமரகுரு தாச சுவாமிகள் தாம் இயற்றிய, திருவலங்கற்றிரட்டு 420 பக்கத்தில் " **மூன்றும் அவர் தம்முகம் ஒன்றும் விழி** " என ஓதியுள்ளது காண்க. அருட் கண்கள் பன்னிரண்டு. அழிப்புக் கண்கள் ஆறு ஆகும். இதனைக் கூறாமல் அருள் விழிகளை மட்டும் கூறினர் முன்னோர். பயனற்றபாலை நிலத்தை நீக்கி, ஐவகை நிலத்தை நானிலம் எனவழங்குமாறுபோலக்கொள்ள வேண்டும்.

## 19. கேரள நாட்டிற் கிளர்ந்த செயல்கள்

அங்கிருந்து பல தலங்களைத் தரிசித்துக் கொண்டு, திருநெல்வேலி சென்றனர். வழக்கப்படி வேற்பூசை ஆதியன செய்திருந்தனர். கையிலிருந்த பொருள் முற்றும் தீருமாறு நேர்ந்தபின், கடனுகப் பொருள் பெற்றும் பூசனை செய்தனர். மீண்டும் பொருள் வேண்டித் திருநெல்வேலியை விட்டு, கேரள தேசம் சென்றனர். அந்நாட்டு அரசன்மூலம் உதவி பெறவும், புலமையாற்றலை விளக்கவும் கருதினர். வள்ளியூர் வழியாக, திருவனந்தபுரம் போயினர். அரண்மனைப் புலவர் வீட்டில் தங்கியிருந்து அவர் மூலம் ஒரு திருமுகம் விடுத்தனர். அரசன் அதனைக் கவனிக்கவில்லை. சிலர் இவரிடம் அரசனைக் காணும் சமயம் வாய்புதைத்துக் கைகட்டிப் பேசவேண்டுமென்றனர். அது கேட்டு சுவாமிகள்,

> "எங்கும் புதையா(து) இலங்குதமிழ்ப் பாடலெனும்
> பொங்கு மதுரம் பொழியும்வாய் - நங்குகவேள்
> இன்னருள் செய்யரன் ஏனினுமெழிற் கேரளத்து
> மன்னனிடம் போய்ப்புதைக்கு மா".

என்னும் வெண்பா ஓதினர். அந்நகரிலுள்ள, பதுமநாபப் பெருமாளுக்கு "யமக அந்தாதி-திருப்புகழ்ப் பதிகம், கீர்த்தனை ஆதியன சுவாமிகள் பாடினர். அக்கால் ஓர் நாள் அரசன் மாலையில் உல்லாசப் பவனி வந்தான். படை வீரர் புடைசூழ வருவது கண்டு, நெருங்கிச் சென்று அரசனை நோக்கிப் பாடலொன்று கூறினர்.

"உன்றனது கேரளநா டொன்றுமே, இங்கிலங்கும்
என்றனது நாடுலகம் எங்குமே—பொன்றரசீ
மாட்டாயோ சேர மகராச னேமதுரப்
பாட்டாசை யின்றேல் பகர்.

என்ற பாட்டைக் கூறினர். அது வினவியும் கவனியா மல் தலையசைத்துச் சென்றனன் அரசன். தமிழருமை யுணராத அவன் குணங்கண்டு மனச்சலிப்படைந்தனர்.

"ஆயிலியச் சேரன் அநியாய்க் காரன்மனை
வாயிலிற்போய்ப் பிச்சையின்றி வந்தேனே—நீயிலையோ
வேலாயு தக்குகனே வெள்ளிமலை போற்குலவும்
காலாயு தக்கைமுரு கா."

என்ற பாடலையோதி அவ்வூரை விட்டு மீண்டனர். கொச்சி வழியாக வந்தனர். அப்பதியரசனும் தமது கருத்துக்கு இசையாததை யறிந்தனர். பொதியை மலையை வலமாக வர எண்ணினர். அங்கிருந்து கடலின் ஒதுக்கமான காயலில் (வள்ளம் என்னும் சிறு தோணி யில்) ஏறி வடதிசையை நோக்கிச் செல்லலானார். அப் போது இருள் நிறைந்த இரவு நேரமாயிருந்தது. அன்றி யும், தோணி செலுத்துவோர், மதுக்குடி வெறியுடைய இளைஞர். உடன் இருந்தவர் புலால் ஊன்உணவினர். புதிதாகப் பழகித் தோணி விடுமவர்கள், சமுத்திரம் நோக்கிவிட்டனர். அதனை யாருமறியார். இந்நிலையில், தோணி மரத்தில் ஒரு ஓட்டைவிழுந்து நீர் உள்ளே ஏறியது. உடன் ஒருவன் துணைகொண்டு நீரைவெளி யேற்றினர். அந்நிலையில் அந்தர வெளியில் ஒரு அசரீரி யாக ஆட்களை அதட்டி நேர்வழியிற் செலுத்தும்படி முருகன் கூறினன். வேறு யாரும் அவ்விடத்தில் வர எக்காரணமும் இல்லை. இவர் மனதில் நீ அஞ்சற்க.

*திருநீற்றுக் கோயில் வடிவாக உன்னிடம் இருக்கின்றோம்." என்றருளினர் பெருமான். இதைக் கேட்டறியும் நிலையில் யாரும் உடனில்லை. இன்று இவ்விபத்தில் பிழைத்தோமானால், முன் திருமலையில் பிழைத்தது போலாகுமென்றெண்ணினர். சிறிது நேரத்திற் படகு கரை சேர்ந்தது. கடவுளை நினைந்து போற்றினர்.

"சேட்டைமிகும் சாராயக் குடிவெறியர்
ஓடம்விடும் சிறுவர் ஆட்டை
மாட்டைவதைத் துண்போர்ஆங் குடன்உறைவோர்
காயல் குட்டி வாரிபோல்வ(து)
ஏட்டையெமன் எடுத்தான்கொல் எனுமாறு
பெருவிரல்இட் டெடுக்கத் தக்க
ஓட்டையொன்றும் விழுந்திருட் டிரவுவிளக்
கில்லையென்னென் றுரைப்பேன் அம்மா

—குருபரதத்துவம், மலையாளச் சருக்கம்.

கருவைப் படந்தை என்னும் ஊரின் கரை சேர்ந்து, அங்கு நியமங்களை முடித்தனர். இவருடன் ஏசுமதத்து வேளாளன் ஒருவன் உடன் துணையாகச் சேர்ந்து வரக் கண்டபோது, இவ்வூரில் தமிழ்பேச உடனிருப்பதுகொண்டு, பகல்வழிநடந்து, சோர்வுடன் இரவு முன் சாமத்தில் "பெருவனம்" என்னும் ஊரையடைந்தனர். அங்கு எவ்விதத்தினும் உணவு கிடைக்கவில்லை. ஒரு பாழும் சத்திரத்தின் திண்ணையில் துண்டை விரித்துப் படுத்தர். அப்போது "இன்றைக்கு நான் பசியோடு வருந்தும்படி, எல்லா உயிர்களுக்கும் உணவளிக்கும் கடவுளுக்குச் சேர்வதாக" என்று சொல்லிச் சிறிதுநேரம் துயின்றனர்.

*திருநீற்றுக்கோயில்—விபூதிப்பை.

## 20. மாயவன் உணவு வழங்கப் பெறுதல்

அன்றிரவு வைணவவேதியர் ஒருவர், சத்திரத்து முகப்பில் நின்று இங்குப் பட்டினியாய்ப் படுத்திருக்கும் பரதேசி யார்? என்று மூவிசை கேட்டனர். அவ்வோசை கேட்டு முருகதாசர், இதோ இருக்கின்றேன் என்று கூறி எதிர்சென்றனர். வேதியர், "இதோ உணவு இருக்கிறது, வாங்கிக் கொள்க" என்றனர். தண்ணீர் உள்ள இடத்தில் உதவினால் நலமென்றும், உணவு கிடைத்தது போதுமென்று பெற்று உண்பவனல்ல நான் என்றும் சுவாமிகள் கூறினர். அருகிலுள்ள பெரியதொரு தெப்பக் குளத்தினைக் காட்டினர். தான் கொணர்ந்த சோற்றினை வாழையிலையில் அமையும்படி படியின்மீது வைத்து, மோரும் உப்பும் பெய்து, இரண்டு பெரியதான மோர் மிளகாயும் வழங்கினர். நான் விரைவிற் செல்லவேண்டும். பல வேதியர் எனக்காகக் காத்திருப்பர், விடை தருக என்றனர் அழகிய வடிவில் வந்த அந்தணர்.

சுவாமிகள் வியந்து நீர் எந்த நாட்டினர் என்றலும், அவ்வேதியர் வெளிநாடு என்றார். பேர் யாது என்றதற்கு, சீநிவாசன் என்றனர். என் பொருட்டு நீர் இவ்வளவு பிரயாசை எடுத்ததற்கு என்னகாரணம்? என்றபோது, "நீ எதோ ஒரு சொல் சொன்னது என் மனத்துக்குத்துன்புதவியது," எனக் கூறினர். இங்கு வந்துள்ள இவன், மாயனோ. மனிதனோ என ஐயுற்றனர். தொட்டுப் பிடித்து அருள்புரியும்படி மன்றாட எண்ணினர். மாயவனையின் குற்றமின்று. மனிதரில், இரக்கமும் சமரச எண்ணமும் உடையவர்களும் உண்டு. அப்படி இருந்தால் குற்றமாகும். இவ்வளவு தூரம் வெளிவந்த

தெய்வம், கைவிடாது என்று கருதியிருந்த சமயம் திடீரென வேதியர் மறைந்தனர். முருகதாசர் மனம் கலங்கினர்,

> **“குருவனப்புக் கண்டறியார் கொச்சிவள நாட்டின்**
> **பெருவனத்தில் என்னைஅன்பிற் பேணி-அருமையுடன்**
> **அன்னம் கொடுக்கவந்த அந்தணனே அந்தவண்ணம்**
> **சொன்னம் கொடுக்கஒண்ணு தோ.**

என்ற பாட்டை ஓதினர். கொடுத்த அன்னம் அதிகமாயிருந்ததால் இருபகுதியாக்கி, ஒரு பாதியைத் தாம் உண்டு, மற்றொன்றை உடன்வந்த நீறணியா வேளாளனை எழுப்பி உண்ணச் சொல்லினர். இறையுணர்வற்றவனாதலின், பசியிருந்தும் வேண்டாமென்றனன். எவ்வுயிரும் கடவுளின் குழந்தைகள் என்ற பரந்த நோக்கம் கொண்டவர் சுவாமிகள் ஆதலின், கோபக் குறிப்புதோன்ற அதட்டி உரிமையுடன் உண்ணச் செய்தனர். விடிந்தபின் வேறு பக்கம் அவரவர் போகலானார்கள்.

கொச்சியை விட்டு கொங்கு நாட்டையடைந்து, ஊற்றுக்குழி என்னும் பதிவந்தனர். அவண் உள்ள சிற்றரசரைக் கண்டுவர நினைத்தனர். தக்கவர்மூலம் கடிதமனுப்பி, பதிலை எதிர்பார்த்து இரண்டொரு நாளிருந்தனர். அவ்வூரில் கணக்கு வேலைபார்த்த அன்பர் உரிமையுடன் பல வசதிகளும் உபசாரமும் செய்தனர். அரசரிடமிருந்து இப்போது சமயமில்லை என்ற பதில் வந்தது. முன் அரைப்பாட்டில் அவ்விதத்தைக் கூறினர். சூரியன் முன் திருவுளச்சீட்டுப் போட்டனர். பழனிக்குப் போகும்படி சீட்டு வந்தது.

ஆதலால் அச்செயலைப் பிந்திய பாதிக்கவியில் அமைத்தனர். புகைவண்டி வழியாய், பழனித்தலம் சென்றனர்.

> "ஊற்றுக் குழியில் ஒருகணக்கப் பிள்ளைசெய்த
> ஆற்றல் அளவும் அரண்மனையார் செய்யவில்லை
> ஏற்ற மிகுபழனிக் கேகென்(று) இரவிசொல்லத்
> தேற்றியது: வேலனருள் செய்யும்விதம் தேர்ந்திலனே."

என்னும் பாடலால் இவ்விவரம் விளங்கும்.

## 21. பழனியில் ஆயிரம் பாட்டியற்றிடுதல்

திருவருட் சம்மதப்படி பழனியூர் வந்து, நீராடி, நியமமுடித்து அமுதுண்டனர். மலைமீதுள்ள முருகன் கோவில்தவிர, நடுவில் ஒரு கோவில் இருப்பதறிந்து, சுவாமிகள் அங்குள்ளவரிடம் கேட்டனர். இடும்பன் கோவிலென்பதையும், கொலைப்பூசை அங்கு நடப்பதென்பதையும் அறிந்தனர். ஆதலால் அந்த மலையின் மீது ஏற உடன் படவில்லை. இரவு துயில் கூரும்போது முருகன் மனக்கண்முன் தோன்றினர். இடையில் இடும்பனிருந்தால், "நீ நேரே நம்மிடம் வருக" என்றருளினர். மலைமீது செல்லுங்கால், இடும்பனையும் கண்டு அறிவுறுத்தும் வகையில் ஒரு வெண்பா ஓதிவிட்டுச் சென்றனர்.

> "பாடுமன்பர் போற்றும் பழனிமலைப் பாதியில்நின்(று)
> ஆடும் இடும்பா! அறையக்கேள்—நீடும்
> கொலைகண்டு மாமிசம்உட் கொண்டுவக்க வேண்டாம்
> நிலைகண்டு மெய்யருளில் நில்."

என்பதாம்.

தண்டபாணிக் கடவுளைத் தெரிசித்து வந்து அடிவாரத்தில் ஓரிடத்தில் சிலகாலம் தங்கியிருந்தனர். சந்தப்பதிகம்—விருத்தப்பதிகம். பழனித் திருஆயிரம் ஆதியன பாடினர். அவ்விடத்தில் அக்கால் சிறந்த புலவராக விளங்கிய மாம்பழக்கவிச் சிங்க நாவலரைக் கண்டனர். அவர் அதிக உரிமையுடன் பழகினர். அங்கு ஒரு மடாலயத்தையமைத்தனர். ஓர் நாள், முருகன் கிட்டையில் செட்டிவடிவாகி வந்து, நம் இனத்தவரிடம் செல்லுக என்றனர்.

## 22. சேது பதிபால் கவித்திறம் தெரித்தல்

சுவாமிகள் அந் நகர்விட்டு, மதுரை வழியாக இராமநாதபுரம் சேதுபதி சமத்தானத்துக்து ஏகினர். அரண்மனைப் புலவர் ஒருவர் இல்லத்திலிருந்து அரசருக்குக் கடிதம் ஒன்று விடுத்தனர்.

அரசர் சந்திப்பு நேரவில்லை. ஆனால், ஓர் வெண்பாவின் ஈற்றடியில், 'கண்விண்பெண் பொன்பண் கனி'' என்றபடி சமஸ்திவந்தது. (ஈற்றடி கொடுத்து மேலே மூன்றடியைப் பாடச் செய்தல்) நேரில் கண்டு பேச இடந்தராமல், சுவாமிகட்கு சமஸ்த்தி அனுப்பப் பட்டதை அறிந்த புலவர்கள், அரசர் தமக்குக் கொடுத்ததாய் மறைத்துக் கூறினர். அதைச் சுவாமிகள் கண்டனர். பதில்விண்டனர். தமிழ் தோன்றிய பாண்டிநாட்டின் கண், பிறந்து பொதிய மலையினின் றும் வருகிற தாமிரபரணியாற்றுத் தண்ணீரையுண்டு வளர்ந்துவாழ்பவன் நான், நீவிர் கூறுவது மனமறிந்த பொய்யாகும், எனக்குத் தந்தது தான் இது. ஆனால், பொதுவாகப் புலவர்க்கு வெண்பா புலி, போல்வது

என்பது வழக்கம். வண்ணம் பாடுகின்ற பெரும் புல வனுக்கு அது மிக எளிது. அப்படியான வண்ணக் கவிகள் பல பாடியுள்ளேன். இதோ ஒரு கலை பாடித் தருகின்றேன். நீங்களேனும் அரசரேனும், பாடுங்கள் என்று கூறி, அந்தவெண்பாவுக்குரிய, ஆறு சொற் களுக்கு வரிசைப்படி பொருளமைய முன்மூன்று அடிகளை, சுவாமிகள் உடனே பாடினர். ஆறு சொற் களின் பொருளை முருகன் ஒருவனுக்கே அமைத்தனர்.

**முருகனுக்கு; மூவாறு, முன்புதொட்டுக் காத்தல்,**
**உருகுமயல் ஈதல், உறுபூண் — பெருகுசெவி**
**உண்மகிழ்ச்சி சேர்ப்ப(து) உலகதனைச் சூழவிடல்,**
**[1]கண், [2]விண், [3]பெண், [4]பொன், [5]பண், [6]கனி.**

**இதன் பொருள் :**

முருகனுக்கு,

1. கண்-மூஆறு-பதினெட்டு. ஒவ்வொரு முகத் துக்கும் அக்கினிக்கண்கள் சேர்த்துக் கொள்க.

முன்பு தொட்டுக் காத்தல்,

2. விண்-தேவலோகத்தின் அரசுரிமை.

உருகும் மயல் ஈதல்,

3. பெண்-இச்சை விளைத்தது வள்ளி நாயகி.

உறுபூண்,

4. பொன்-அணிந்துள்ள பணிகள்.

பெருகு செவியுள் மகிழ்ச்சி சேர்ப்பது,

5. பண்-அன்பர்கள் துதிப் பாடல்.

உலகதனைச் சூழவிடல்,

6. கனி-மாம்பழத்துக்காக வலம் வந்தது.

என்பதாம்.

இதைக்கண்டபின்னுவது இருவரும் சந்தித்து மகிழத் திருவருள் கூட்டவில்லை. அரசர், புரட்டாசி மாதம் வந்தால் கருத்துப்படி நிறை வேற்றுவதாகப் புலவர் மூலம் சொல்லினர். சுவாமிகள் அதற்குள் முருகன் என் விருப்பத்தை நிறைவு செய்வான். கொலைப் பலிப்பூசை இயற்றும் அக்காலத்தில் நான் வர இசையேன். என்று கூறித் தேவகோட்டைக்கு வந்தனர்.

## 23. வடலூர் அடிகள்பால் மன்னிய நட்பு

அங்கிருந்து கூடலூர் சென்றனர். அங்கு ஒரு செட்டியார் இவர்பால் அன்பு கொண்டு உபசரிக்கும்படி தங்யிருந்தனர். அவர் சுவாமிகளுக்கு உரியதாகப் பாதுகை புதிதாகச் செய்து அணிந்துகொள்ள உதவினர். ஒருநாள் பின்புறம் வேலியின்முள் காலில் தைக்க வருந்திய போது பாதுகையணியும் வாய்ப்பை, செட்டியார் நல்கினர். அதனுல் மகிழ்ந்த சுவாமிகள்,

**கூடலூர்ச் செட்டிமகன் கும்பிட் (டுப)சரித்துப்**
**பாடனைந்தம் பட்டுதவும் பாத குறட்டருமை**
**நாடனைத்தும் மெச்சுபுகழ் நாயடியாள் மங்கலத்தின்**
**வீடடுத்த தோட்டத்தின் வேலியாற் கண்டோமே.**

என்ற கவிதையை ஓதி, அருமை பாராட்டினர்.

வடலூர், இராமலிங்க சுவாமிகள் என்றபெரியார், அவ்விடம் ஓரன்பர் இல்லத்தில் தங்கியிருப்பதறிந்தனர், நேரில் சென்று கண்டு உறவு கொண்டனர். இருவரும் தமது கருத்தின் ஒற்றுமையைப் பரிமாறிக் கொண்டனர். இறைவன் திருவருளைக் கொண்டே உலக மக்களை நல்வழிப் படுத்த வேண்டும்; எல்லா அறங்

களினும் சீவகருணையை மக்கள் உள்ளத்தில் நிலை பெறச் செய்ய வேண்டும் ; என்ற கருத்து இருவர் உள்ளத்தும் ஒன்றியிருந்தது. அத்தகைய அரிய பெரிய செயலைச் செய்ய, அருட்சித்தியே வேண்டும். அதை நல்க வேண்டி, தன்னலம் கருதாமல் அல்லும் பகலும் அயராது தவம் புரிந்தவர்கள் இரு பெரியார்களும். இராமலிங்க சுவாமிகளைப் பற்றி, தண்டபாணி சுவாமி களுக்கு முருகன். பூருவத்தில், தாயுமானுராக இருந் தவர் என்று கூறினர். அவரிடம் இவ்வுண்மையைக் கூறினர். அவர் அதை வினவி, இருக்கலாம் என்று ஓதினர்.

**வடலூரான் முன்தாயு மானவனே என்னும்**
**திடமாற்ற மேபோற் சிலர்வந்—திடலோதிக்**
**கொன்றுன் எழுப்பிக் கொடுக்கும் திருநாளே**
**நன்றும் அவற்றில்மிக்க நாள்.**

**அருமைத் தமிழ்த்தாயு மானபிள்ளை தாமே**
**பெருமை இராமலிங்க பிள்ளை-பொருவிலதாக்**
**கூறும் உரையாற் குலவு நச்சி ஞர்க்கினியார்**
**ஆறு முகநா வலர்.**

என்று கூறினர்.

தண்டபாணி சுவாமிகள் சந்தப் பாடலைக் கேட்டு. மகிழ்வர் வடலூர் அடிகள், " மிடியில்சீர் வடலூரான் முதற் புலவோர் கேட்டுளம் மிக வியந்ததுவே " என்று இவர் ஒரு சந்தர்ப்பத்தைப் பற்றிக் கூறுகின் ருர். இப்படி மூன்று தடவை சந்தித்து உறவு கொண்ட விவரம் சுவாமிகள் கூறுவது காண்க.

" அவனுடன் மூன்று காலம் அளவளாய்ப் பேசி யுள்ளேன், எவளவும் பேதமின்றி என்கருத் திசைந்தே சொன்னுன் " என்பது, குருபரதத்துவம்.

இவர் திருவுருமறைந்த செய்தியறிந்து மிக மனம் வருந்தினர். இறைவன் சுவாமிகள்து நிட்டையில் விளங்கி, அவர் எழுந்து வரும்படி பாடல் கூறுக என்றனர். அநுபவப் பதிகம் என்று ஒரு பதிகமும், வடலூரர் வருகை குறித்த பதிகம் என்று ஒரு பதிகமும் பாடினர். மேலும், சிவபெருமான் பதிகம் பாடும் போது, வடலூரர் எழுந்து வருதல் வேண்டுமென்று விண்ணப்பம் செய்வார். தனக்கு வலது தோள் போன்றவர் வடலூரடிகள் என்று பாராட்டப்படு கின்றனர் புலவர் புராணத்தில். இவர் பாடலை அவர் விரும்புவது போல் அவர் பாடலின் நயங்களை இவர் பாராட்டுவர்.

"வாழைநறுங் கனியினைப்பா கினிற் குழைத்தாங்
கினித்த செஞ்சொல் வனைந்து போற்றும்
ஏழையன்பன் ஒருவனைப்பாழ் இருட்டறையுட்
செல்ல உய்த்தாய் என்செய்தாயோ" என்பர்.

இப்படிப் பல பாடல்கள், நிகழ்ச்சிகள்.

## 24. செட்டிநாட்டில் நிகழ்ந்த செயல்கள்

1. தனவணிகச்சீலர் செறிந்து வாழும் தேவ கோட்டை சென்றபோது, வேதாந்தம், கறுப்பன் செட்டியார் என்னும் பெரியாரது, தனித்தவச் சாலையில் தங்கினர். உரிமையுடன் பழகிய அவர், இவரது உயரிய பண்புகளைப் பலரிடமும் எடுத்துக் கூறினர். அந்நகரில், மேலவீடு சிதம்பரம் செட்டியார் என்பவர், அன்புடன் வணங்கி, தமக்கு மகப்பேறு இல்லாத குறையைத் தீர்க்கும்படி வேண்டினர். அதற்கு இவர், எனக்கு இப்போதுள்ள பொருட்கடன் தீரப் புரிந்

தால், முருகன் உமது மனையவள் வயிற்றில் ஆண் மகவு உதிக்கச் செய்வான் என்று கூறித் திருநீறு வழங்கினர். உடனே ஆயிரம் ரூபாய் திருநெல்வேலிக்கு அனுப்பிக் கடனை நிவிர்த்தி செய்தார். தாம் கூறிய சொல் தவறாமல் பலிதமாகும்படி வேண்டி தேவகோட்டை நகரத்துச் சிவன் கோவிலில் விளங்கும் தண்டபாணிக் கடவுளுக்கு அரிய ஒரு பிள்ளைத் தமிழ்-திரிவந்தாதி, திருப்புகழ் முப்பத்தாறு கொண்ட தான ஒரு நூல். பதிகம் ஆதியனபாடினர். சில நாள் கடந்து ஆண்மகப் பேறு எய்தி மகிழ்வுற்றனர் செட்டியார். தேவையில் இருந்த வன்றொண்டஞ் செட்டியார், "காற்றேபஞ் சாயிருக்குங் காண்". என்ற வெண்பா ஈற்றடி கூறினர். மேலே மூன்று வரிகளை-அதன் கருத்து விளங்க உடன் கூறினர்.

"கடுஒழுகும் வாய்க்கினிய காசினியிற் றேர்ந்து
கொடுபருக்க ஒட்டாது கொண்டு—நெடுநாளா
மாற்றே(வு) உறங்குகின்ற மாசுணத்தோல் மெத்தைக்கு"
காற்றேபஞ் சாயிருக்கும் காண்—என்பது கவி.

2. பின், குன்றக்குடிப்பெருமானுக்கு, அரிய கலம்பகம் முதலியன பாடினர். காரைக் குடியில் உள்ள தனவணிக மக்கள் அன்பு பாராட்டும்படி சிலநாள் தங்கி, அந்நகர் முருகனுக்கு, முப்பத்தாறு திருப்புகழ் ஆதியன பாடி அரங்கேற்றினர். ஒருநாள் ஒரு வேதியர் வீட்டில் அமுது புசிக்கச் சென்றனர். சிறிது நேரம் முருகனைத் தியானித்திருந்தனர். அக்கால், அடுத்த வீட்டுத் திண்ணையில் ஒரு பெரியார், ஒரு மாணவனுக்குப் பாடம் சொல்லு முறையில், அருணகிரியார் இயற்றிய **வகுப்பு** ஒன்றினைப் போதித்தனர். அங்கு

சென்று "இச் சிறுவனுக்கு இப்பாடலைப் பயிற்றுவது பிரயாசை" என்றனர். அது கேட்ட அவர் அஷ்டாவதானம், பால சுப்பிரமணிய ஐயர் என்பவர். பெரிய புலமையுடையவர். சுவாமிகளைக் கண்டதும் வியந்து தம் அருகில் அமர வைத்தார். தாங்கள் இருப்பது எவ்விடம் என்றனர். திருநெல்வேலி என்றனர். சுவாமிகள். அப்படியானால், அவ்வூரினரான முருகதாசரைத் தெரியுமா? அவர் நலமுடன் இருக்கின்றனரா? அவர் உங்களுக்குத் தொடர்பினரா? இப்போது எங்கிருக்கின்றார்? என அன்புடன் வினவினார். சுவாமிகள், தீவினைத் தொடர்பால் பொருளை விரும்பி உழலும் இந்த அடியேனைத்தான் உலகத்தார் அப்படிக் கூறுவர் என்றார். அதைக் கேட்டதும் ஐயர், அளவிலா மகிழ்ச்சியுற்றனர். அன்று முதல் தமது இல்லத்திலேயே அமுதுபுசிக்க ஏற்பாடு செய்தனர், வண்ணம் பாடும் அளவுக்குப் புலமை வருமாறு தேர்ச்சியுறச் செய்தனர் சுவாமிகள். இவரை நேரில் காணுமுன், முருகன் இவர் போல் தோன்றியது கொண்டு, அப்படி வினவினார் ஐயர்.

3. குன்றக்குடிப் பெருமானுக்கு உத்தரவுப்படி பாடிய ஆறு வகுப்புகளும், வண்ணமும் சந்நிதியில் அரங்கேற்றிய சபையில், வணிகர்கள் கூடி ஐந்நூறு ரூபாய் வழங்கினர். காரைக் குடியில் செட்டியார் ஒருவர் போல் சபையிற் சில நேரம் பேசியிருந்து மறைந்தது கண்டு, காரை நகர்ச் செட்டியுருக் காட்டினனே" என்று பதிகம் 10. பாடல் கூறினர். காரைக் குடியில் இருந்தபோது, ஒருநாள் இவரிடம் அன்புள்ள ஒரு அந்தணர், குன்றக்குடி செல்வதானார். எதிரில்

ஒரு அந்தணத்தவசி வருவதறிந்தனர். அவரை வணங்கி, தன் இல்லத்தில் உணவு கொள்ள வேண்டினர். இசைவு தந்தார். பின், தனக்குள்ள, சில மந்திரத்தின் ஐயங்களைக் கேட்டறிந்தனர். சிறிது முன்பாக தண்டபாணி சுவாமிகள் இவரது புத்தக முதலானவை அடங்கிய சிறு மூட்டையை எடுத்தேகினர். தவசியிடம் இவர் சூத்திர மரபினரல்லவா-தங்கள் பொட்டணத்தை எடுத்தேகுகின்றனரே எனவினவினர்.

தவசி அந்தணரைப் பார்த்து, அவனை அப்படி எண்ணாதே! எனது சீடன்" என்றனர். சரியெனக் கேட்டு உவந்தார். பின் சுவாமிகளை அழைத்து, இவரை என் வீட்டில் விடுத்து உம்மிடம் செல்க என வேண்டினர். சரியென ஒப்பினர். தான் குன்றக்குடி சென்று மீண்டு தனது இல்லம் வந்தார். வேறு ஒரு தவசி வீட்டிலிருந்தார். தான் கண்டதவசியைக் காண வேண்டி இவரிடம் வந்து அவரைக் கேட்டனர். சுவாமிகள் தான் ஏதுமறியேன் என்றனர். ஐயர், பரிகாசம் கூறுவதாக எண்ணி மேலும் கேட்டார். தான் காலை முதல் இவிடமே யிருக்கிறேன் என்று உடனிருந்தவர் சான்றுடன் உண்மையைக் கூறினர்.

வந்தவர் முருகனென்றறிந்து பலரும் வியந்து அந்தணரைப் பாராட்டினர். முருகன் காட்சி தந்தும் அறியாதிருந்தேனே என்று புலம்பினர்—சுவாமிகள், பொருளை விரும்பி ஊர்தோறும் அலையும் அடியேனை உன்சீடனென்று சொல்லினையே! முருகா, சிவபிரானும், அகத்தியனும், மற்றும் எத்தனையோ பேரும் உன்சீடர்கள், நான் அத்தகுதியுற்றவனோ? என்று பதிகம் பாடினர். " துட்டேமெய்த் தெய்வமெனச் சுழல்வே

ஊனச் சீடனெனச் சொன்னாய் கொல்லோ—மட்டேயும் பொழிற் குன்றக் குடியானே எனப் பதிகம் வரைந் தேன்? என்பது (கு-ம்) காரைக்குடிச் சருக்கம். இது போன்று இன்னும் பலரிடம் பகலில் தோன்றி முருகன் செய்த ஆடல்கள் பல. அவரிடமெல்லாம் அது நானல்ல என்றே கூறினர். அவ்விவரம் எல்லாம் குருபர தத்துவ நூலில் சுவாமிகள் கூறுவ்தால் அறிய லாம். அங்கிருந்து இடையில் பலபதிகண்டு வேம்பத் தூர் சென்றனர்.

4. வேம்பத்தூரில் "பிச்சுவையர்" என்பவர் அந்தணப் புலவர் ஆசுகவி பாடவல்லவர். ஒரு இடத் தில் இவரைக் கண்டனர். தமது இல்லத்தில் இவருக்கு உணவளிக்க விரும்பினர். புலவர் ஆனதாலும், சுவாமி களும் புலவர் ஆதலாலும், தமது கருத்தை உள்ளடக்கி அவரை அரை வெண்பாவில் வினவினர்.

> "பூமிக்குள் மிக்க புகழ்முருக தாசரெனும்
> சாமிக்கு நைவே தனம் எங்கே"

என்றார். உடனே சுவாமிகள்

> ............................?............தேமிக்க.
> செந்தமிழின் சீரும் திருக்கைவேல் ஏந்திவரும்
> கந்தனன்பும் உள்ளமனைக் கண்.

என்று பின்அரைப் பாடலில் விடை கூறினர். ஐயர் மகிழ்ந்து தமது இல்லத்துக்கு அழைத்தேகி உண வளித்து, சிலநாள் கவியின்பம் நுகர்ந்தனர். இவரியற் றிய வெண்பாவால் ஆகியநூல் ஒன்றுக்கு, சாத்து கவி கூறினர் ஐயர்.

"சந்தக் கவிக்கே சரபம்நீ என்றிருந்தேன்
இந்தக் கவிக்குனையான் என்சொல்வேன்-சந்ததமும்
ஆர்முருகார் செஞ்சடிலத் தண்ணலடி யார்மகிழ
நேர்முருக தாசமன்னனே."

என்பது போலப் பலவாம்.

5. ஒரு சைவர் வீட்டில் அமுதுண்ணச் சென்றனர். அவர் இவரது தன்மை உணராமல், திருவேடத்தைக் கண்ட அளவில் (பரதேசி தானே என்று) வீட்டு முற்றத்தில் இலையிட்டனர். அப்போது இவர், "சோறுகிடைத்தது போது மென்று உண்பவன் என்று எண்ணவேண்டாம். மேலிடத்தில் வைத்து இட்டால் உண்டபின் இலையெடுத்துச் சுத்தி செய்ய அறிவேன்" என்று துணிவுடன் ஓதினர். அவர் அஞ்சியவராய், பணிவுடன் வீட்டுக் கூடத்தில் அமரவைத்து உணவளித்ததுமன்றி, உலகில் பரதேசிகள் என்றால் பலவிதமாயிருப்பார்கள் என்று கருதியே முதலில் அவ்வாறு செய்தேன் என்று தம் கருத்தை விளம்பி மன்னிப்பு வேண்டினர். "பொய்வேடம் இட்டு வந்தோரையும் சிவபிரானது வடிவமாகவே கொண்டு வழிபடும் சைவர்களும் உலகில் உள்ளனர் அல்லவா" என்று கூறி, திருநீறுதவி வெளிவந்தனர்.

6. கோட்டூர் என்னும் பதிக்குச் சென்ற சமயம் ஓரன்பர் உணவிட்டனர்.

கோட்டூரிற் சைவன்முகம் கோணுமற் கூடத்தில்
ஈட்டுதென்னை யோலை இலைகொணர்ந்து-போட்டெனக்குச்
சோறும் இலைக்கறியும் சுண்டைக்கா யும்பருப்புச்
சாறும்இட்டுப் பெற்றான் தவம்.

என்று அங்குப் புசித்த உணவின் தன்மை, அவரது அன்பின் தரம், அவர் பெற்றபேறு, இவற்றைப்

புகழ்ந்து ஒரு வெண்பா ஓதினர். "பகரும் ஞானிபகல் ஊண்பலத்துக்கு-நிகரில்லையென்பது நிச்சயந்தானே" என்ற திருமந்திரப் பாடலுடன் சிந்தித்தற் குரியது.

7. நெடுங்குளம் என்ற ஊருக்கு ஒருநாள் ஏகினர். தமது வழிபாடு முடித்துக் கொண்ட பின்னர் நடுப்பகல் நேரமாயது. உணவுக்கென அந்தணர் வீடு தேடிச் சென்றனர். அவ்வீதியில் நான்கு வீடுகளிருந்தன. மூன்று வீடுகள் தகுதியினதாயில்லை. நான்காவது வீட்டினுள்ளிருந்து இவர் பார்க்கும் நேரம், மங்கல அம்மைஒருத்தி வெளிவந்தாள். இவரைக் கண்டதும், சுவாமீ ! என்ன பார்க்கிறீர்கள் என்றனள். இவ்வேளைக்கு வேண்டிய உணவு குறித்து வந்தேன் என்றனர் சுவாமிகள். வருக என்றழைத்து உபசாரத்துடன் உள்ளவற்றை அன்புடன் படைத்தனள். உண்டபின் இடத்தைச் சுத்தப்படுத்தி, அதற்கான பணத்தை உதவ முயன்றனர். தொகையைப் பெற உடன்படவில்லை. எனது கணவர், இதுபோல் யாரேனும் நல்லோர் பெரியோர் நம் இல்லம் வந்தால் அன்புடன் உணவு கொடு என்று கூறிய கட்டளைப் படியே அளித்தேன். துட்டுக்காகச் சோறு விற்கவில்லை என்று தெரிவித்ததைக் கேட்டு வியந்து விடை கேட்டனர்.

அந்த அம்மை, எனது மனத்தில் இரண்டு ஐயங்கள் உள்ளன. அவற்றைத் தெளிய வைத்துச் செல்க என்றனள். எனக்குத் தெரிந்தது ஏதாயிருப்பினும் சொல்வேன், கூறுக ! எனச் சொல்லினர் "புண்ணிய வடிவான அம்மை, கீழ்க் கண்டபடி கேட்டனள்"

1. தருமம் என்பதன் உண்மையான வடிவம் யாது ?
2. உயிர்கள் இறைவனிடம் பெறும் பயன்களுள்

மேலானது எது ?" என்பதாம். சுவாமிகள், "1. தன் போன்ற உயிர்களிடத்துப் பதில் உதவியை விரும்பாமல் உதவி செய்வதே உயர்ந்த தருமம். 2. மற்றொரு தாய் வயிற்றிற் பிறவாமல் ஒன்றுபடுகின்ற பரமுத்தியே தெய்வத்தால் பெறப்படும் பயனில் மேலானது" என்று விடை கூறினர். சரியென்று ஒப்பி விடைதந் தந்தனள். வியந்து வெளிவந்தனர் சுவாமிகள். இத்தகைய அந்தணர்களும் உள்ளனரே என மகிழ்ந்தனர்.

> "நெடுங்குளத்திற் பார்ப்பதியை நேராம்ஓர் அம்மை
> கொடும்பசியைத் தீர்க்கும் குணத்தாள்-இடும்பரிசு
> வேண்டாதாள் உண்மை விவேகம் மிகவுடையாள்
> ஆண்டான் அருளே அவள்"

என்ற பாடலையெழுதித் தக்கவரிடம் உதவி மீண்டனர். திருநெல்வேலிப் பதிக்குச் சென்று வழக்கப்படி பூசனையியற்றியிருந்தனர்.

## 25. மாண்புயர் சற்குரு மகிமை யுணர்தல்

வண்ணச் சரபராகிய முருகதாசர், ஒருநாள் சிறப்புப் பூசனை புரிந்து, தெய்வ சிந்தனையுடன், உடல் இளைப்பு காரணமாக ஓய்வு கொண்டிருந்தனர். அப்போது ஒரு தெய்வீகத் தோற்றம் கண்டனர். முருகன் சிறுசடை, கையிற் பிரம்பு, கால்களிற் பாதுகை. கல்லாடையுடை, அக்கம், திருநீறணிந்த திருமேனி துலங்க வான வெளியிற் காட்சி தந்தனன்.

அத்திருவுருவைக் கண்டதும் சுவாமிகள் பெருமகிழ்வுற்று, "சுவாமி ! வருக, என்னுடன் அமர்க" என்று அழைத்தனர். அவர் பூமியில் உட்கார்ந்தால்

என்பெருமை குறையும் என்றனர். இவர், உனது அத்தகைய அருட்பெருமை யாது என்றனர். அவர் அளவிறந்த பல மதங்கள் தோறும் கலந்து நிற்பதும், அவரவர் கருத்தின்படி திருவுருக் கொண்டு அருள்வதும், மனவாக்குக் கெட்டாதபடி வெளியாயிருப்பதும் என்றனர். சுவாமிகள், அங்ஙனமாஞல் உயிர்க் கொலை புரிந்து ஊன்புசிக்கும் இழிசமயத்துக் கடவுளரும் நீ தானே, கனக சபையில் ஐந்தொழிற் புரியும் கூத்தப் பரமனது நெற்றிக்கண் தரவந்த குமாரன் நீயன்றே ? என வியப்பும் மறுப்பும் தோன்ற வினவினர். அந்த இரண்டு விஞக்களுக்கும் ஒரே விடையாக, "என்னை யன்றி வேறு பொருள் இல்லையென்று உறுதியாக ஓதினர். சுவாமிகள், ஆயின், நால்வேத உடன்பாடான அறுவகைச் சமய மூர்த்திகளின் வடிவுகளைக் காட்டுக என்றனர். அம்மொழி கேட்டு அவர் நகைத்தனர். **"உன் சிறுமதிக்கு எட்டியவாறு கேட்டனை, வேதங்கள் அனந்தம் உண்டு. அவை முழுதும் முதலில் பல பேதங்களைக் கூறினும், முடிவில் அகண்டத் தன்மையை ஒப்புக் கொள்வனவே. அத்ததைய பரவெளி வடிவமும், நீ விரும்பிய ஆறுவடிவங்களும், மற்றெல்லாம் நானே என்பதை விளக்க, உன்வடிவமும் காட்டுவேன் அறிக"** என்று கூறி மறைந்தனர்.

முதலில், சுத்தப்பர வெளியாகி, பின்பு, சூரியன், சிவன், அம்பிகை, திருமால், கணபதி, முருகன் என்னும் வடிவங்களாக வரிசைப்படி காட்டினர். பின் இவரது வடிவமாகி - அஞ்சற்க - அருள் செய்வேன் என்றனர். முருகன் வடிவில் நின்றபோது பலவுண்மை கூறினர். இத்தகைய பல உயர்ந்த அநுபூதிகண்டபின் உலக

உணர்ச்சி ஏற்பட்டது. பேரின்ப உணர்வில் திளைத்த பின் சமரச ஞான பீடத்தமர்ந்தனர்.

## 26. பலபத்தி யினிற்செய் பண்புறு நிகழ்ச்சிகள்

### 1. நூல்கள் சிலவற்றின் குறிப்பு

திருநெல்வேலித் தலத்தில் சுவாமிகள் தங்கியிருக்கும் காலத்தில், முருகப் பெருமானது அருளுரைப்படி, அருணகிரிநாத சுவாமிகள் புராணத்தை, 450 விருத்தப் பாடலால் எல்லா நயங்களும் இனிது அமையப்பாடி அரங்கேற்றினர். புலவர் புராணம், எழுபத்திரண்டு புலவர்கள் வரலாற்றைத் தொகுத்து, தெய்வீகப் புலமையை விளக்கி 3000 கவிகளிற் பாடினர். திருவாமாத்தூர்த்தல புராணம். வடமொழியிலிருந்ததை, 1000 கவிகளில் பாடினர். தமது அநுபவமும் வரலாறும் அமைய, உபாசனையை விளக்கி 1000 பாடலிற் குருபரத்துவம் என்ற பெயரில் பாடினர். இவை வரலாற்று நூல்கள்.

### 2. உபாசனைக்குரியவையாக

கௌமார முறைமை (கருமம், பத்தி, ஞானம் என்னும் முப்பிரிவில் 300 கவி.) ஞானிலைச் சதகம், தியானுநுபூதி. ஞான அந்தாதி போன்ற பதிறுறு நூல்களும், இலக்கண நூல்களும், கலம்பகம், யமகம், திரிபு. ஏகபாதம், நிரோட்டம் என்ற இதழகல் அந்தாதிகளும், பிள்ளைத் தமிழ் ஐந்தும், பதிகச் சதகம், சதப்பதிகம், ஏழாயிரப் பிரபந்தம், தில்லைத்திருஆயிரம் பழனித் திரு ஆயிரம், திருவரங்கத் திரு ஆயிரம், தெய்வத் திருவாயிரம், போன்ற தொகைப் பிரபந்தங்களும், மறுநெறித்திருநூல், சத்திய சூத்திரம், வருக்கக்குறள்,

போன்ற உலகப் பொதுவான நீதிநூல்களும், அரசாட்சி நூல் என்ற அரசியல் நூலும், முசுகுந்த நாடகம், துதிக் கீர்த்தனைகளான நாடகத்தமிழ்ப் பாக்களும், உரை நடையில், சத்திய வாசகமும், தெய்வத் துதி நூல்கள் தலக் குறிப்பாகவும், பொதுவாகவும் பல ஆயிரக் கணக்கில் இயற்றியுள்ளனர். அவ்வச் சமயங் களில் கூறிய தனிப் பாடல்கள் பல. இவையாவும், ஓரே தடவையில் பாடி, பனையோலை ஏட்டில் தாமே எழுதியும் தொகுத்தும் வைத்துள்ளனர். இப்படியுள்ள பாடல்கள் 50000 ஆகும். இதன்றி, ஊடல் காரண மாக நெருப்பு, ஆற்றுநீர் கடல் நீரில் சிதைத்தகவிகட்கு அளவு கூறமுடியாது.

## 3. சேலத்தில் விபத்து திருவருள் விலக்கல்

கொங்கு நாட்டுத் தலம் தெரிசித்து, சேலம் வந்த சமயம், அங்கு, சிவன் கோயிலில் இரண்டொரு நாள் தங்கிப் பாடலியற்றினர். புறப்படும் சமயம் மண்ட பத்தின் மீதிருந்து ஒருவன், கீழே வீதியில் நடப்பதை யறியாமல் ஒரு பெரிய கருங்கல்லை யெடுத்து எறிந் தான். வீதியில் நடந்து செல்லும் இவர் தலைமீது, கல் வந்து கொண்டிருப்பதை அறிந்தனர் உடன், பின் நடந்துவந்த சோழவந்தான் கந்தசாமி சுவாமிகள். அதை, சுவாமிகட்கு அறிவித்து விலகச் சொல்ல நேர மில்லை. எப்படியும் விழும், பின் இவரது நிலையை எப்படிப் பார்ப்பது என்ற அச்சத்தால், சுவாமீ என்று கூவி மயங்கி விழுந்தனர். அந்தக்கல் இவர் சிரசின் மீது போட்டிருந்த துண்டின்மீது பட்டுக் கீழ் விழுவ தும், இவர் கூப்பிட்டதும் ஒரே கணம். இரண்டு ஓசையும் கேட்டுத் திரும்பிப் பார்த்தனர். அனுவள

வில் விபத்து நீங்கியதைப் பின்புதான் அறிந்தனர் சுவாமிகள். கந்தசாமி சுவாமிகளின் மயக்கம் தெளிவித்து, முருகன் காப்பாற்றினான் என்றோதினர். பின் புகைவண்டியில் ஏறிச் சென்னைவரும் சமயம் ஆதலால் உடன் ஒரு பதிகம் வண்டியிலிருந்தே பாடினர். " கல்வி மூந்தி டாதபடி காத்த தெய்வம் துணையே " என ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் அமைத்தனர்.

> " சேலநகர்ச் சிவன்கோயில் மடண்டபத்துற் றொருவன்
> தெரியாமையால் எறிந்த திரள்கருங்கல், தலைமேல்
> காலமிருத் தாகிவிழா(து) அணுவளவில் விலக்கிக்
> காத்ததெய்வந் தனைநாடிக் களித்துநெல்லையூரான்
> மாலனையார் மலிசென்னை நகர்க்கேகும் வழியில்
> மருவுபுகை வண்டியிடை வரைதரும்இப் பாடல்
> சாலநலம் எனக்கொண்டு படிக்கின்றோர்க் கெல்லாம்
> சற்றேனும் அவமிருத்து சாராது நிசமே.

தெய்வத் துணைப் பதிகம். ஈற்றுக்கவி.

புதுவையில் முன்பு, தமக்கு அன்பராய் அமைந்திருந்த " தானப்ப ஆசாரியார் " உலக வாழ்வை நீத்த செய்தியறிந்து மனம் வருந்தினர்,

> " மானப் புலவர் மகிழ வழங்குசெங்கைத்
> தானப்பன் இல்லாத் தனிப்புதுவை—வானத்தில்
> எல்லாப் பொருளும் இருந்தும் இலங்குதிங்கள்
> இல்லாத தன்மைஒத்த தே.

என்ற பாடலை ஓதி அமைதியுற்றனர். முன் அருணகிரிநாதர் பாடியதான பூதவேதாள வகுப்புச் சந்தத்தில், திருப்புகழ் ஒன்று புதுவை முருகன்மீது பாடினர். அவ்வாறு புதுவையில் இருந்த சமயம்,

முருகன் எனது தங்கையை உனக்குத் தருவேன் என்றருளினர். அதன் கருத்து, கலைமகளின் திருவருள் மேலும் அதிகமாகத் தரும் குறிப்பென எண்ணினர்.

## 4. திருமணம் ஏற்றுத் திகழும் மாட்சி

அந்நாளில், வேலாயுதம் பிள்ளை, திருமலையம்மை என்பவரது புதல்வியாகத் தோன்றிய சுந்தரம்மையை இவருக்குத் தத்தம் புரியும்படி முருகன் உத்தரவு செய்தபடியால், இணங்கி ஏற்று, தெய்வச் செயலென, தாமரை இலைநீர் போன்று, இல்லறம் துறவறம் என்ற இரு நிலையினும் விளங்கினர் சுவாமிகள். அக்கினி சாட்சியை விடத் தெய்வ சாட்சியே சிறப்புடையது என்ற கருத்தினையுடையராகி, மயிலத்து முருகன் சந்நிதியில் திருநீற்றுக் காப்பிட்டு, ஆறுமுக உருத்திராக்கத்தை மங்கலமாக அணிந்தனர். மங்கலத்துக் கென்று, ஒவ்வொரு மரபு-நாடுகளில் உள்ளவர் ஒவ்வொரு முறையைக் கொள்வர். பலர் அறியக் கன்னிகையைக் கைப்பிடித்தல் என்பதை வடமொழியில் "பாணிக்கிரகணம்" என வழங்குவது காண்கின்றோம். வெளியளவில் செய்யப் பெறும் ஒரு கட்டுப் பாட்டுச் சின்னமே, மங்கலக்குறியாம். அடியார்களின் பசித்துயரை இனிய உணவினாலும், பிறவித்துயரைச் செவியுணவினாலும் போக்க அருள் சுரந்த நிலையில் திருமணம் ஏற்றனர்.

## 5. அணிற்குஞ்சுகளை அன்புடன் காத்தல்.

புதுவையினின்றும் வளவனூரைச் சார்ந்த குமாரபுரி என்னும் பதியைச் சேர்ந்தனர். அங்கு, புதுவையிலிருந்த சண்முக சுவாமிகள் என்பவர் மடாலயம் வகுத்துத் தங்கியுள்ளமையை அறிந்தனர். சென்று

அவரைக் கண்டு மகிழ்ந்து பல நாள் தங்கியிருந்தனர். சண்முக சுவாமிகள், நடராசர், சிவகாம சுந்தரி. கணபதி, முருகன், மணிவாசகர். என்னும் மூர்த்தி களைச் செம்பினால் அமைத்துக் கும்பாபிடேகம் வேத விதிப்படி செய்தனர். அக்கால் பலபதிகம்பாடி இவர் அரங்கேற்றினர். மண்டலாபிடேகம் நடந்தபின், அந்தப் பந்தல்களைப் பிரித்தனர். அணில்கள் கூடு கட்டி குஞ்சுகள் வைத்திருந்தன. ஆட்கள் கூட்டுடன் அப் படியே எடுத்து வந்தனர். சண்முகசுவாமி, தண்டபாணி சுவாமி, சோழவந்தான். கந்தசாமி சுவாமி ஆகிய இம் மூவரும் பேசிக்கொண்டிருந்த இடத்தில் கொண்டு வந்து வைத்துவிட்டு ஏகினர். மிக இளம்பருவமான அவற்றை எவ்விதத்தும். காக்க முடியவில்லை. காக்கை கள் கூட்டமிட்டன. இரக்கமிக்க தண்டபாணி சுவாமிகள், இதன் தாயும் தந்தையுமான அணில்கள் வந்து எடுத்துச் செல்லவேண்டும். பெரியோர்கள் திருநீற்றால் முத்தியடைந்தது உண்மையானால் இவை பிழைக்கட்டும். அப்படியானால் உனக்குப் பாடல் கூறுவேன், என்று காத்தற் கடவுளான திருமாலை நினைத்து, திருநீற்றை அவற்றின்மேல் இட்டனர். சிறிது நேரத்தில் பெரிய அணில் இரண்டும் வந்து குஞ்சுகளை எடுத்து ஏகின. அதுபோற் பதிகம்பாடிப் படித்தனர். பின்பு தமது பூசனை செய்து புசித்தனர்.

**" மாயைவலி மிகக்காட்டி வருத்தமிகப் படுத்தாதுன்**
**சேயையொத்துக் களிகூரத் திருவருள்சற் றுதவாயோ**
**வாயையெல்லும் தரமின்றி மதுரமுலைப் பால்தரும்தன்**
**ஆயைவிட்டுப் பரதவித்த அணிற்காத்த பெருமாளே.**

**ஷைபதிகம்.**

## 6. தில்லையில் ஆயிரம் திருபாட் டுரைத்தல்.

சில நாள் குமாரபுரியிலிருந்து, திருவதிகை, திருப்பாதிரிப் புலியூர் முதலிய தலங்களைத் தெரிசித்துப் பாடினர். சிதம்பரத்தலம் சென்றனர். சிவகங்கையில் நீராடி வழிபாடுகளை முடித்து, கனகசபைக்குச் செல்லலாயினர். சுவாமிகளுக்கு நண்பரும், சிவபக்தி மிக்கவரும் ஆகியவர் அம்பலவாண சுவாமி என்பார். இவரைப் பார்த்து, சுவாமீ, தாங்கள் உங்கள் அப்பனை முருகனையே சதா காலமும் பாடுகின்றீர்களே, எங்கள் அப்பனுகிய நடராசப் பெருமானைக் கொஞ்சம் பாடக் கூடாதா என்றனர். அது சமயம் இவருடன் இருந்த பூசைப் பணியாளன், திருவருளின் தூண்டுதலாலோ, அறியாமையாலோ, இந்தக் கோயிலில், தேங்குழல்கள் பெரிதாயிருக்குமென்றனன். இவர் அதைக் கருத்திற்கொண்டு, அம்பலவாண சுவாமியைப் பார்த்து, உங்கள் அப்பன் இவன் விரும்புகின்றபடி சிற்றுண்டியைப் பிரயத்தனமின்றிக் கொடுப்பானேயானல், ஆயிரம் பாடல்கள் பாடுகின்றேன் என்றனர். அம்பலவாண சுவாமிகள், அப்படிச் செய்யக் கூடிய திருவுள்ளந்தான் எப்படிச் செய்யுமோ என்றனர். அனைவரும் கனகசபை சென்று தெரிசித்தனர். ஆராதனை முடிந்து பலருக்கும் திருநீறு உதவி வரும்போது, ஒரு வேதியர் சுவாமிகளைக் கூவி "இங்கேயே நில்லுங்கள். உங்கட்கு நிவேதனப்பிரசாதம் கொண்டுவருகின்றேன்" என்றனர். இவர் "திருவருட் செயல்" என்று கூறியிருந்தனர். வேதியர் ஒரு தட்டத்தில், இரண்டு பெரிய தேங்குழல், இரண்டு வடை, இரண்டு சுகியன், ஆகிய இவற்றைக் கொண்டுவந்து நீட்டினர். தெய்வசிந்தனை

யுடன் மேலணிந்திருந்த சிறுவத்திரத்தில் வாங்கினர். அப்போதுதான் அந்தச் செயலை அம்பலவாண சுவாமி கண்டனர். அளவிலா வியப்பும் பெருமகிழ்வும் உற்றாராகி சுவாமி எங்கள் அப்பன் அருளைப் பார்த்தீர்களா! என்று கூறியபடி அன்பு மிகுதியால் உணர்ச்சியற்று விழுந்தனர். கண்களில் நீர்பெருகிற்று. பலரும் புகழ்ந்தனர். சுவாமிகள் அவரை அணுகி, "உங்கள் அப்பன் வெற்றிபெற்றான் எழுக" என்றனர். திருவருட் பிரசாதத்தைப் பங்கிட்டு உண்டு மகிழ்ந்தனர். சில காலம் கடந்து பல உட்பிரிவுகளுடன் உள்ள ஆயிரம் பாட்டுகள் தில்லைத் திருவாயிரம் என்று பாடிமுடித்தனர்.

இந்நூலை, சென்னையில், காசிவிசுவநாதர் ஆலயத்தில் அரங்கேற்றிவரும் சமயம், ஒருநாள் வீதியில் செல்லும்போது, இவரிடம் அன்பு பூண்டவரான பூவை-கலியாண சுந்தரமுதலியாரும், அவர் மாணவர்களும், பல அன்பர்களும் புடைசூழச் சுவாமிகள் சென்றனர். எதிரே வந்துகொண்டிருந்த சகல கலா வல்லரான பூண்டி. அரங்கநாத முதலியார். எம்.ஏ. அவர்கள், சுவாமிகளைக் கண்டவுடன் நடுவீதியில் இவரது திருவடிகளில் விழுந்து வணங்கினர். எழுக என்று கூறி அருளுரை கூறினர். காஞ்சி-நாகலிங்க முதலியார் இவரிடம் ஆறெழுத்து உபதேசம்பெற்றனர். வண்ணக் களஞ்சியம் என்ற சிறப்புப் பட்டம் சுவாமிகளிடம் பெற்றனர். இதுபோற் பலர் சென்னையில் உண்டு.

தில்லைத் திருவாயிர நூல் முதற்பாடலான ஒன்றில், முன் நிகழ்ந்த செய்தியை விளக்கியிருக்கின்றனர்.

> "பொன்னம் பலவாநின் போதமும்என் புன்மதியும்
> முன்னம் அறிய ஒரு முத்தனெதிர்-சொன்னபடி
> ஆயிரம் பாடல் அறைந்த பின்னரானலும்
> நீயிரங்க வேண்டும் நினைத்து."

என்பதாம். நடராசப் பெருமான்மீது 100 திருப்புகழ் 25 வகுப்பு. பலவிதப் பாடல்களான துதிகள். சீரிய கருத்துச் செறிவுடன் இருக்கிறது தில்லைத் திருவாயிர நூல் சுவாமிகள் முன்னிலையில் பதிப்பான நூலாகும்.

## 27. பரங்கிரிக் குகன், கவி பாட அடிதரல்

தண்டபாணி சுவாமிகள், சிதம்பரத் தலத்தை விட்டுப் பலபதி தெரிசித்து, திருப்பரங்குன்றம் சேர்ந்து முருகப் பெருமானைத் தெரிசித்திருந்தனர். ஒரு நாள் திருப்பரங்கிரிக் கடவுள், இவரது மனக்கண் முன் தோன்றினர். புதுக் கல்லாடையுடுத்து. திருநீற்றுப்பூச்சுடன். உருத்திராக்கமாலையணிந்து, பருத்த திரு மேனியுடன் இருந்தது கண்டனர், அவரைக் கல்வியறிவில்லாதுவெறும் வேடமட்டும் உடைய தவசிபோலும் என்று கருதினர். 'நினைப்பார் தம் மனத்துக் கோர் வித்தும் ஆனாய்'' என்ற அப்பர் திருவாக்குக்கு ஒப்ப, எல்லாம் உணர்ந்த முழுதுணர் புலவனான பெருமான் இதனையறியாமலா இருப்பார். இப்படி எண்ணவைத்ததும் அவர் தானே? தாம் இவர் கருத்தை அறிந்துள்ளேன் என்பதை விளக்கவோ என்னவோ, "**காண்பரங்கிரி**" என்ற எடுப்பில் ஒரு வெண்பா ஓதுக! நீ தமிழ்ப் புலமையிற் சிறந்துள்ள தன்மையை அறிகிறேன்'' என்று கூறி, வாதம் செய்ய வருபவர் போல நெருங்கி, எதிரில் இருந்தனர். அவ்வடிவினர்

முருகப் பெருமானே என்று உணராத நிலையில், தமது உபாசனைக் கடவுளான முருகனை நினைத்து ஒரு பாட்டு கூறினர். அதை வினவி மறைந்தனன் பெருமான். "காட்டிஞல் யாரொருவர் காணுதாரே" என்றவாறு திருவருள் உணர்த்திஞல்தானே உணரமுடியும்.

அக்கவியில் ஒரு வியப்பு. என்னவென்ருல், அச் சொல்லை ஒரு சீராக வைத்தால் வெண்பாவுக் குதவாத கனிச்சீர் ஆவதும், இருசீராக்கி **காண்பரங்-கிரி** என்று கொண்டால், விளச்சீர்முன் நிரையசையாவதும், காண் பரங்கி, ரி என்று கொண்டால் சீர்ஒடிந்து வருவதும் ஆகி, தளை தட்டுதல் ஆவது கருதி, வஞ்சிப் பாவுக்குரிய கனிச்சீரை, வெண்பாவுக்கு அமைத்து ஓதும்படி சொன்ன வம்பினை நோக்கி, அளபெடை சேர்த்து, **கா அண்-பரங்கிரி** என்று இருமுழுச்சீர் ஆக்கி வெண்பாவைக் கூறினர். கனவில் இவ்வளவு ஆராய்ச்சியும் தெளிவும் இவருக்கு அமைந்திருந்தது வியப்புக்கிடமாவதோடு, திருவருளின் தன்மையும் ஆகும்.

இச்செய்தியை, தமது வரலாற்று நூலான குருபர தத்துவத்தில் திருப்பரங்கிரிச் சருக்கம் 10, 11-கவிகளிற் கூறுகின்ருர். மற்ருெரு நாள், ஒரு பாடலுக்குரிய ஈற்றடி ஒன்றைத் திருப்பரங்கிரி முருகப் பெருமான் கொடுத்தனர். "**கோமடந்தை இதயலயா**" என்ற அச்சொல்லை வைத்து ஒரு பதிகமே பாடினர். "**கோமடந்தை இதயலயா குமரகுரு பரமுருக குகப் பெம்மானே**" என்பதாம். பின் நெல்லைப் பதி சேர்ந்தனர்.

கனவிற் சொன்ன கவி. வெண்பா

"காஅண் பரங்கிரியிற் கந்தாளன் காதலெல்லாம்
வீஇண் படலாமோ வேலுடனே—தூஉணன்ன
தோளுந் துலங்கமயிற் றேகைகிழ லூடெதிர்வந்(து)
ஆளுகைக்கீ தேசமயமாம் ஆம்,"

"விழித்தும் அக்கவி மறந்தது இன்று" என்று கூறு கின்றூர் ஷெ நூலில் விவரம் ஆங்குக் காண்க.

## 28. கொழும்புப் பதியிற் குலவிய செய்தி

திருநெல்வேலியிற்றங்கி வேலாயுதப் பூசனை, தமிழ் நூல்கள் இயற்றுதல் முதலிய செயல்களை நடந்தியிருந்த சமயம், தமது பெயரால் ஒரு தவச்சாலை அப்பதியில் அமைத்தல் நலமென்று கருதினர். அவ்வாறு செய்தற்கு வேண்டிய பொருள் வசதியை முதலில் அமைத்துக் கொள்ள வேண்டும். முன் போன்று கடன் வாங்கி எதுவும் செய்யலாகாதென்று தீர்மானித்தனர். அன்றிரவு முருகன் மனவெளியில் விளங்கி, நீ புகைக் கப்பல் ஏறி, கொழும்பு நகருக்குச் செல்லுக. உன்னுடன் சில தனவணிக மக்கள் உடன் வருவார்கள், அவர்களால் நலம் உண்டாகும் என்று கட்டளையிட்டனர். அதற்கிணங்கி, தூத்துக்குடியின் கடற்கரை சேர்ந்தனர். முருகன் அருளுரைப்படி செட்டியார்கள் சிலர், நெருங்கி வந்து உறவு கொண்டனர். கடலில் கப்பலேறிச் செல்வதாயினர். மாலை நேரம் சந்திரன் தோன்றினன். உடுக்குலம் விளங்கின. வானவெளிபோன்று கடலிலும் பசுமை தெரிந்தது. மேலும் (ஆகாயமும்) அம்பரம், கீழும் (கடலும்) அம்பரம் என்ற இருவிதப் பொருள் கொண்ட சொல்லணி நினைந்து மகிழ்ந்தனர்.

மரக் கலத்திருந்த பெரும்பான்மையினர், மரக்கறி யுண்பவராயில்லை. உயிர்க் கொலையும் செய்வதானுர் கள். இச்செயலைக் கண்டு மனம் பதைத்து, திருவருளைச் சிந்தித்து, உறக்கமின்றியிருந்தனர். விடிந்தது. கரை சேர்ந்து கொழும்பு சென்று, செட்டியார்களால் அமைத்த முருகன் கோவிலில் அமர்ந்தனர். இவரது பாடல்கள், சொற்பொழிவுகளை இனிது கேட்டு மகிழ்ந்தனர் பலர். கணபதி, முருகன், சிவபிரான், ஆதிய மூர்த்திகட்குப் பதிகம்பாடி அரங்கேற்றினர். அன்பினர் சூழ, கண்டி கதிர்காமம் என்னும் தலம் சென்று துதிப்பாடலியற்றினர். குப்பான் செட்டியார் முதலிய தன வைசியப் பெருமக்களால் ஆதரிக்கப் பெற்று, 1050 ரூபாய் உதவக் கொண்டு மீண்டும் தூத்துக்குடி வழியாக திருநெல்லை வந்தனர்.

## 29. பாறைக் கிணற்ருல் பலஇடர்ப் பாடு

திருமடம் அமைப்பதற்குத் திருநெல்வேலியில், தமது வயலில் மனையமைத்து, கால்கோள் செய்து, பூமி மட்டம் வரை கட்டிடம் உருவாயது. அந்நிலையில், பூசைக்கும் உணவுவகைக்கும், நந்தவனத்துக்கும் ஆகக் கிணறு ஒன்று எடுக்க எண்ணினர். அதற்கான வேலைக்காரர் மூலம் இடம் தீர்மானித்துப் பூசை செய்து, வெட்டத் தொடங்கினர். ஒரு சாண் ஆழத்தின் கீழ், கடினமான கருங்கற் பாறையாயிருந்தது கண்டு பலரும் அயர்ந்து, வேறிடம் வெட்டலாமென் ருர்கள். அப்படியிருக்கும் போது “ அதே இடத்திற் போதிய அளவு நீர் ஊற்று இருப்பதால், அங்கேயே வெட்டலாம் என்றனர் முருகன். அதனுல் ஊக்கத் துடன்வெட்டலாயினர். அறுபது சாண் வரை வெட்டி

யும் நீருற்று பெருகவில்லை. சிறுகசிவே காணப்பட்டது. மக்கள் வெடிவைத்தெல்லாம் கல் எழுப்பினார்கள். வெகு வெறுப்பும் கேலியும் பெருகி வருத்தம் தந்தன. வெகுவாகக் கைப்பொருள் தீர்ந்து கடனும் பெருகியது. ஆதலின். இனி அருளைக் கொண்டன்றிப் பொருளைக் கொண்டு வேலை செய்வதில்லை என்று உறுதி கொண்டு நிறுத்தினர்.

## 30. பொதிகையில் வைணவர் புகலும் அருளுரை

சுவாமிகள் பொதியை மலைசென்று, கிணற்றில் நீருற்றுவரக் கருதி, அகத்திய முனிவர் ஆலயத்தில் தங்கிக், கடினமான தவமியற்றினர். அங்கு வழிபாடு புரியும் அகத்திய ஐயர் என்ற அந்தணச் சிறுவரும் இவருடன் அங்கு உறு துணையாய் வாழ்ந்தனர். அப்போது ஓர் நாள், மாலை நேரத்தில் வெளியே வந்து பார்த்தபோது. இருவைணவ வேதியர் அந்த ஐயரிடம் ஏதோ பேசிய முடிவில், 'எங்கள் முடிவு இது' என்றதை வினவி, என்ன செய்தி என்றனர் சுவாமிகள். வைணவர் இருவரும் தமையன் தம்பிகள். அவருள் இளையவர் இவரைப் பார்த்து நீர் ஏன் அதையெல்லாம் கேட்கிறீர் " என்றனர். மூத்தவர் தம்பியைப் பார்த்துக் கூறுகின்றார்.

" தம்பீ, நீ-கருமம்-பக்தி-என்ற இரண்டு மட்டும் பெற்றனை, அவற்றின் விளைவான ஞானம் அடையவில்லையே. இத்தகைய தவவேடப் பெரியவர் வந்து நின்று, வலிய வினவியதற்குப் பணிவாகப் பதில் கூறாமல், இப்படி வெறுத்துப் பேசினையே, அகத்தியர் போன்ற மகான்கள் வந்து வினவினாலும் இப்படி இடி

முழக்கம்போல் கூறுவையல்லவா, நமது நிலைக்கு இது தகுமோ" என்று அடக்கிவிட்டு, சுவாமிகளை நோக்கி, இச்சிறுவன் மொழிக்காகத் தாங்கள் மனம் வருந்த வேண்டாம். இவன் எனது தம்பி. எங்கள் ஊர் மன்னார்கோவில், வைணவர் என்று வாயளவிற் கூருமல். திருமாலை உள்ளபடியே உபாசிப்பவர்கள். கலிக் கொடுமை (வறுமை) நீங்கும்படி கருணை செய்ய வேண்டி இம்மலையில் வந்து தவம் செய்தோம். உணவு கொண்டு நான்கு நாள் ஆயிற்று. அந்நிலையில் இவன் மனவெளியில் திருமால் தோன்றி, சில செய்திகளைக் கூறினன். புதையலிருக்குமிடம் அறிந்தும், எடுக்க முடியாதவர் போலிருக்கின்றோம் என்று கூறி, நீ கண்ட காட்சி விவரத்தைச் சொல்க என்றனர் தம்பியிடம்.

தம்பி கூறுகின்றார், யாரோ முருகன் அன்பன் ஒருவன் இருக்கின்றானும். கிணறோ குளமோ வெட்டி அதில் நீர்ப் பெருக்கம் விரும்பியுள்ளானும். பெரியநீர் ஊற்று பின்பு உண்டாகுமாம். அவனைக் கண்டால் எங்கள் துன்பம் நீங்குமாம். இவ்விவரம் சொன்ன கடவுள், அவன் இருக்குமிடம், பெயர் கூறவில்லை. ஆதலால், இம்மலையின் மேலே இன்னும் சென்று, வாணதீர்த்தக் கரையில் அமர்ந்து, தவம் செய்து விவரம் உணர்த்தப் பெறவேண்டும். அங்கும் விளக்காவிட்டால் அங்கிருந்து உயிரை விடுவது எனத் தீர்மானித்துள்ளோம். இதுதான் என்று கூறிக் கண்ணீர் வடித்தனர்.

அது கேட்ட முருகதாசர், மனம் பிரமித்தனர். மறுமுறையும் ஓதக் கேட்டனர். விடை கூறுகின்றார்

சுவாமிகள். அந்தப் பாவி நானே தான். தங்களுக்குப் போதிய அளவு உதவி செய்யத் தக்க சம்மதம் உடையவனே. ஆனால் அந்தக் கிணற்றினால் மிகச் செலவு செய்து சோர்ந்து, பெரும்பொருள் கடன்பட்டு, சிறகு முறிந்த கருடன் போல இருக்கின்றேன் என்று கூறினார். கேட்டு அவர்கள் இருவரும் பெருமகிழ்வுற்றனர். நாங்கள் செய்த தவம் நிறைவேறியது என்று கூறினர். சுவாமிகள், அவர்கட்கு உணவு வசதிகள் செய்து, சில நாட்கள் வரை அங்குதங்கியிருக்கச் செய்து, அவர்களுடன் திருநெல்வேலி வந்து, ஓரளவு மகிழ்ச்சியுறுமாறு தக்க பொருளுதவி செய்து ஊருக்கனுப்பினர். அது பெற்றுச் சென்ற அவர்கள், தமது வறுமை நாளடைவில் தீரப்பெற்றுப் பொருள் வளமுற்றனர். தனக்கெவ்வளவு துன்பமிருந்தாலும், தன்னை வந்தடைந்தோர்கட்குள்ள குறைகளை இயன்ற அளவு உதவி புரியும் கொடைத் தன்மை இவரிடமிருந்தது.

> "சந்தன மென்குறடு தான்தேய்ந்த காலத்தும்
> கந்தம் குறைபடா தாதலால்—தந்தம்
> தனம்சிறிய ராயினும் தார்வேந்தர் கெட்டால்
> மனம்சிறிய ராவரோ மற்று.

என்பது ஔவையார் வாக்கல்லவா? கங்கையந்தாதி பாறைக் கிணற்றந்தாதி, முதலிய பல நூல்கள் நீர் ஊற்று வரவேண்டிப் பாடினர். திருவருள் விளக்கிய ஒரு அருள் விளக்கத்தால் பொதியையிலிருந்து திரும்பி நெல்லை வந்தனர். உலகப் பொதுவான மக்கள் பலரது, வறண்ட பாறை போன்ற மனத்தில், பொறாமை, வஞ்சம், பொய், சூது—முதலிய தீக் குணங்கள் மாறி, அன்பு, சத்தியம்-கருணை முதலிய

குளிர்ந்த நற்குணம் உதிக்கச் செய்ய வேண்டிய முயற்சியை, வெளியில் நடத்திக் காட்டிய முறையே, இந்தக் கிணற்று முயற்சி என்பது உண்மை. அதற்கு ஏற்ற திருவருள் வெளிப்படும்போது இதிலும் நீர்ப்பெருக்கு ஏற்படும் என்பது கருத்து.

## 31. கொலைப்பலிப் பூசைக் கொடிதற விலக்கல்

சீரங்கத்திலிருந்து, திண்டுக்கல் என்ற ஊர் வந்து, பழனி செல்ல எண்ணி, மாட்டுவண்டியின் மூலம் தும்பி சம்பூட்டி ஊர்வந்தனர். ஓரிடத்தில் தங்கி, தமது வழிபாடு முடித்து உடனிருந்தவர்கட்கு, திருநீறு வழங்கி வெளியில் வந்தனர். சற்று தூரத்தில் ஒரு பேய்க் கோயில் முன்பு, பொங்கலிட்டு இறக்கிவிட்டு, ஓர் ஆட்டைப் பலியிடவேண்டிப் பற்றி இழுத்து வரும் ஒருவனைக் கண்டனர். ஆடு, கதறுவதையும், பின் இழுப்பதையும் பார்த்து ஓடிச் சென்று, உரத்த குரலால் அவனை அதட்டினர். அருகில் நின்று விவரம் கேட்டனர். அதற்கு அவன் கூறுகின்றான். சுவாமீ! இதன் பெயர் சந்நாசியப்பன். மிக்க அருளுடையது, என் மகனுக்குப் பலநாளாயிருந்த வயிற்று வலி தீரும்படி-வேண்டுதல் செய்து கொண்டேன். அநுகூலம் பெற்றபடியால், இந்த ஆட்டினைப் பலியிடப் போகின்றேன் என்று சகசமாய்க் கூறினன்.

சுவாமிகள், சொல்கிறார். இந்த வாய் பேசாத சந்நியாசியப்பனுக்கு இந்த ஆட்டைப் பலியிடவேண்டாம். பேசுகின்ற சந்நியாசியப்பனுன என் சொற்படி பொங்கல், பழம் ஆகியவற்றைப் படைத்துப் பூசைசெய்! என்றனர். சரியென்று ஒப்பி, பூசை செய்யத் தொடங்

கினன். உடனே சிறுவனுக்கு வயிற்று வலி உண்டா யது. துடித்து உருண்டு அழுதான். பார்த்தீர்களா சுவாமீ! எங்கள் தெய்வத்தின் ஆற்றலே, என்று கூறி ஆட்டைக் கொலையிட முயன்றான். சுவாமிகள், உன் மகனுடைய உயிரை நான் உறுதியாய்க் காப்பேன். வலியை மாற்றுவேன், நீ ஆட்டை மட்டும் கொல் லாதே! என்று வற்புறுத்திக் கூறினர். தமது பூசை யிலிருந்த திரு நீற்றைப் பூசி, தீர்த்தத்தை உண்ணக் கொடுத்து, பிரம்பினுல் தடவினர்.

"அயிற்றலேவா தென்பழனி அப்பாஇச் சேய்தன்
வயிற்றுவலி முற்றும்அற மாற்றி—வெயிற்புழுப்போல்
ஏழைகள்வா டப்படுத்தும் இப்பேய் உயிர்குடித்திட்(டு)
ஊழைவென்ருேர் உண்டென் றுணர்த்து."

என்ற பாட்டை யோதினர். முருகனை நாடினர். உட னிருந்தவர் வியக்கும்படி. வயிற்றுவலி முற்றும் நீங்கி யது. தக்கவர் வசம் அந்த ஆட்டை ஒப்புவித்து, கிடை யிற் சேர்த்து வளர்க்கும் படியும். இயல்பாக இறந்த பின்னும் மண்ணிற் புதைக்கும்படியும், கூறி மீண்ட னர். அந்தப் பேய்க் கோயில் நாளடைவில் அழிந்தே போயிற்று. அங்கிருந்து பழனி சென்றனர்.

## 32. மந்திர வலிமையோன் மாண்பு தவிர்த்தல்

பழனி அடிவாரத்தில் ஆவினன் குடியின் பக்கம் சரவணப் பொய்கையருகில் தம்மால் அமைக்கப் பெற்ற மடாலயத்தில் தங்கியிருக்கும்போது, ஒரு சந்நியாசி எதிர்ப்புறமாக மடம் அமைத்திருந்தனர். மாந்திரீக முறைப்படி கறுப்பனை வசியம் செய்து, மக்களிடம் வன்முறையிற் பொருள் சேகரிப்பவராஞர். கொடா தவர்களை மாந்திரீக வழியில் துன்புறுத்தி அஞ்சச்செய்

வர். பனைமரத்தின் கீழாகக் கறுப்பனைத் தாபித்து, கொலைப் பலியிட்டுப் பூசனை புரிவார். அக்கொடுமை யைச் சகியாதவராகினர். கொலைப் பூசையை நிறுத் தும்படி நேரிற் சொல்ல எண்ணி, தமதன்பருட் சிறந்த வேலாயுதம்பாளையம் கறுப்பவேலுக் கவுண்டர் மூலம் அவரை அழைத்தனர். அதுகேட்ட அவர் வருதற்கு இசையாராகினர். என்னை ஏன் அழைப்பது என்றனர். இவரே நேரிற் சென்றனர். நல்ல தவவேடமும், முரு கன் அன்பும் உடையவராயிருந்தும் ஆடு கோழிகளைக் கொலையிடும் பாவச் செயலில் முயலலாமா! என்று சினக் குறிப்புடன் பேசி மீண்டனர். இதன் முதிர்வி ஞல் முருகதாசரிடம் பகை ஏற்பட்[illegible] தனது கறுப் பனை ஏவி விட்டுக் கொல்ல முய[illegible] ஒரு மண்ட லம் அவர் செபித்தால் ஒரு நாளைக்கு இவரிடம் [illegible] இவர் பின்புறமாக வந்து இறுகப் பிடித்துத் தழுவுகிற முறையில் சிலதடவை செய்தது. முருகப் பெருமா னைத் தியானிப்பதால் உடன் மறையும். இப்படி ஆறு வது தடவை வந்தபோது முருகன் மயிலிற்றோன்றி வேலாற் குத்தியிழுத்து எறிய, அது பிணமாக விழுந்த காட்சி கண்டனர். அம்மட்டில் அது நின்றது. அவர் தனது பிடிவாதமான கொலைப் பூசையை விடவில்லை. அதனுல் மனம் வருந்தி அந்தக் கறுப்பன்சிலை உடைய வும் ஆதரவாயிருந்த பனைமரம் ஒடியவும் பாடினர். சிலநாளில் இரண்டும் நிகழ்ந்தது. பின் இவர் பழனியி லிருந்து, யாத்திரை தொடர்ந்தனர்.

## 33. இராமானந்தரை இன்புற ஏற்றல்

கோயமுத்தூருக்கு அருகில் உள்ள சிரவணபுரம் என்னும் பதியில் வேளாளமரபில் உதித்து, இளமையி

லேயே தெய்வ நெறியில் ஈடுபட்டுப் பத்தி செய்த ஓரன்பர், இராமானந்தர் என்பவர். உண்மைஞான உபதேசம் செய்யும் பொருட்டு முருகனே குருபரனாகவர வேண்டுமென்ற தீவிர எண்ணமுடனிருந்தனர். பழனியில் முருகன் செய்த அருளுரைப்படி காலத்தை எதிர் பார்த்திருந்தனர். இந்நிலையில் திருவருட் சம்மதம் நேர்ந்தபடியால், இவரது வருகை தெரிந்து, அவர் பழனி வந்து சுவாமிகளைச் சந்தித்தனர். அவரது உயிரின் தவத்தையும், மனதின் தெளிவையும், அறிந்தனர். சண்மதசமரச சாரமாய், எல்லா மதங்களுக்கும் உடன்பாடாயுள்ள, குருத்து வத்துக்குப் பரத்துவம்கொண்டு வழிபடும் அதீதகௌமார உண்மையை, சுவாமிகள், இராமானந்தருக்குப் போதித்தனர். ஆறெழுத்து மந்திரத்தை வலது செவியிற் கூறி, சிறப்பு நோக்கம் பாலித்து, திருநீறு, உருத்திராக்கம் அளித்து அணியச் செய்தனர். அதுமுதல் தமது பதிசென்று இராமானந்தர் நாள் வழிபாடு, செப, தியான, முதலியன நியதியுடன் புரிந்தனர். நாளடைவில், தவவேடமுற்றனர். தனிவாசத்துக்கெனத் தனித்தவச்சாலை செய்து, பல்லாயிரம் தொண்டர்கட்கு நல்லொழுக்கம் உண்டாக்கி வாழ்ந்தனர். இவரது உபதேச மாணவருள் முதன்மையாய் விளங்கினர். தனது குருநாதரான தண்டபாணி சுவாமிகள் இயற்றிய சாத்திர நூல்களில் மிக்க ஈடுபாடும் அநுபவமும் உடையவரானார்.

## 34. சீரங் கத்திற் றிருவரு ளாடல்

பலசமய பேதங்களைக் கொண்ட புராண வரலாறுகளையும், அகண்டபரம் பொருள் ஒன்றே உண்மையென்னும் வேதாந்தத்தையும், ஒரு சேரத் தழுவிய

தண்டபாணி சுவாமிகள், பழனியில் நடந்த சில செயல்களால் ஏற்பட்டமன வருத்தத்தாலும், அவற்றையெல்லாம், ஒழுங்கு செய்தற்கான திருவருளை முருகன் வழங்காததாலும். உள்ளத்தில் ஊடல் கொண்டனர் பழனியை விடுத்துச் சீரங்கத்தலம் சென்றனர். முன்னம் இயற்றப்பட்டிருந்த திருவரங்கத் திருவாயிர நூலை அரங்கேற்றக் கருதினர்.

**"மேட்டுக் கிரியிற் றடியூன்றி நின்றசெவ் வேளுமென்றன்**
**பாட்டுக் கிரங்குகி லாருயி ருன்;புவிப் பள்ளத்தில்ஓர்**
**ஆட்டுத் தொழிற்பெரும் பாம்பிற் றுயிலும் அரங்கன்என்சொற்**
**கேட்டுத் தியாகம் கொடுப்பனென் றேயிங்கு கிட்டினனே."**

என்னும் பாடலை ஓதினர். அரங்கநாதனைச் சென்று வணங்கினர். ஓர் அந்தணரது கனவில், திருமால் சேவைதந்து, என்மீது தமிழ்த்துதிபாடி வந்துள்ள அன்பனது, மனம் களிக்கும்படி, சந்நிதியில் அரங்கேற்றச் செய்து, முடியும் வரை கவனிப்பாயாக என உத்தரவிட்டனர். அது கேட்ட அவர், தம் இனத்தவர்கட்குச் சொல்லி அழைத்துக் கொண்டு, சுவாமிகளிடம் வந்தனர். அவர்களைக் கண்டு உபசரித்தனர். திருமால் செய்த அருளுரையை ஓதி மகிழ்ந்தனர். பின் பத்திரிகைபதித்து வெளியிட்டு அரங்கேற்றலாயினர், உரியநாளில் பல நாட்டினர் கூடினர். தவசிகளும் வந்தனர். சுவாமிகள் வழக்கப்படி வழிபாடு ஆதியன முடித்தனர். முழுநீறு பூசிய மேனியில் வலது புயத்தில் தென்கலை-இடதுபுயத்தில் வடகலைத் திருமண் அணிந்து, அக்கமாலை. துளசிமாலை-தாமரைமணிமாலை, பூண்டனர். பிரபந்த ஏட்டினையும் தண்டாயுதத்தையும் எடுத்துச் சந்நிதிக்குச் சென்றனர். சந்நிதி நோக்கிப் போகும்போது, இவரது சைவவேடமும், வைண

வச் சின்னமும் ஒருங்கு இருப்பது கண்டு பெருவியப்பும் களிப்பும் உற்றனர் பலர். அவரவர்க்கேற்றபடி பலவாறு பேசினர். அப்போது, யாராவது விபூதிபூசியவன் பாடிய பாடல்தானே என்று இகழ்ச்சியாக ஓதுவானேயானால், அப்போதே ஏட்டைத் தீயில் இடுவேன் என்று திட்டமிட்டுப் போவதானார். அரங்கன் திருவடியில் ஏடுசாத்தி வழிபட்டனர். சந்நிதி முன்பு பெரிய ஆயிரக்கால் மண்டபத்தில் கருடன் முன்னிருந்து படிக்கலானார். சபை தொடர்ந்து நடைபெற்றது. இவர் மாணவருள் ஒருவராகி-ஊற்றுமலை- சமத்தானப் புலவரான கந்தசாமிப் புலவர் கையேடு படித்தனர்.

புர்ாண மதப்படி பேதித்துப் பத்திசெய்யும் சமயவாதிகளுக்கும், சமரச நிச்சய ஞானிகட்கும் ஏற்றபடி எல்லா நயங்களும் கூடியதாக அந்நூல் அமைந்துள்ளது. உட்பிரிவாகப் பல பகுதிகள் உள்ளன. அவ்வாறு இருக்கும் நாளில், பெருமாள் உத்தரவு பெற்ற வேதியரது புதல்விக்கு நல்ல பாம்பு தீண்டி விடம் தலைக்கு ஏறியது. வீட்டினர் இங்கு சபையில் உள்ள அவரிடம் தெரிவிக்கலானார். மனம் நொந்தனர் வேதியர். என்ன விவரம் என்று கேட்டறிந்தனர் சுவாமிகள். அவ்வளவில் படிப்பதை நிறுத்தி, விடம் தீர்ந்த பின்பே மற்றவற்றைப் படிக்கவேண்டுமென்றெழுந்தனர். கருடதேவன் முன்பு சென்று, அவரை வேண்டி ஒருபாட்டுக் கூறினர்.

**அரங்கன் திருமுன்(பு)அமரும் கருடா**
**இரங்கிரங்கிப் பார்ப்பனப்பெண் ஏங்கச்—சிரங்கொண்ட**
**பொல்லா விடத்தைப் பொடியாக்கிப் பூவுலகோர்**
**நல்லானென் றேதஅருள் நல்கு.**

என்பதாம். வேதியரிடம் நீறளித்தனுப்பினர். புலவர் பலர்சூழ, சுவாமிகள் சிந்தனையுடன் வசிப்பிடம்செல்ல லாயினர். அக்கால் உயர்ந்து பொன்னிற மேனியுள்ள வைணவ வேதியராய், பன்னிரண்டு நாமமும் முந்நூலும் அணிந்த வடிவுடன் பகலில் கூட்டத்தின் நடுவே கருடாசாரியார் தோன்றினர். வெண்பாப்புலி வேங்கட சுப்புபிள்ளை என்பவரிடம் சுவாமிகளைச் சுட்டிக்காட்டி "அவர் யார்" என்றனர். சிரவணபுரத்திலிருந்து வந்திருந்த இராமானந்தர். "பரதேசிதான்" என்று கூறியதும், அவர் பெயர் யாது என மீண்டும் வினவினுர். மேலும் பரதேசி என்றே விடை கூறினர். தோன்றிய வேதியர், "நான் கருடாசாரி" என்றனர். அம்மொழியைச் சற்றுமுன் சென்று கொண்டிருந்த சுவாமிகள் கேட்டனர். அஞ்சலியுடன் திரும்பிப் பார்த்தனர். "அந்தணப் பெண்ணின்விடம் தீரும்படி தங்களிடம் தானே விண்ணப்பித்தேன்" என்றனர். "ஆம் எல்லாம் ரங்கநாதன் காத்தருள்வான்" என்று கூறியபடியே உருக்கரந்தனர். கண்டவர் வியந்தனர், மேற்கூறிய இவரது மாணவரான மகாவித்வான் சித்தாந்த ரத்னுகரம் அரன்வாயல் வேங்கடசுப்புப்பிள்ளை என்பவர் ஆசுகவி வல்லவர். உடனே நிகழ்ச்சியை யமைத்து ஒரு வெண்பாட்டு அப்போதே ஓதினர்.

**ஓதும் கருடன் ஒருமனிதன் போல்உருக்கொண்(டு)**
**ஏதும் அறியான் எனத்தோன்றிப்—பேதமிலா**
**நம்மோ(டு) உறவாடி நான்கருடா சாரியென்ற(து)**
**அம்மா மிகஅதிச யம்—என்பதாம்.**

விடபீடை நீங்கியது, மறுநாள் சபை நிகழ்ந்தது. அந்நூலின் திருப்புகழ் ஒன்றில் (14-வது) சனிக்கிழமை

வழிபாடு திருமாலுக்கு உரியதல்ல. புதன்கிழமையே சிறந்தது என்ற கருத்தைத் விளக்கிப் பேசினர்.

**" குரங்கெலாமொரு படையெனவளைய "**
**என்ற தொடக்கப பாடல்**

**கரண்டவாகன னதுகிழமை உனக்(கு)**
**இசைந்த தாமெனும் அவரெதிர் சினவிக்**
**கவின்கொள் மாலதுநடுவுள தெனும்நட்(பு)—அருள்வாயே.**

கரண்டவாகனன்-காக்கை வாகனமுடைய சனி. மாலது-திருமாலுக்கு உரியது. நடுவுளது-ஞாயிறு, திங்கள், செவ்வாய் என்பதற்கும், வியாழன், வெள்ளி, சனி என்பதற்கும், நடுவில் உள்ளதான புதன்கிழமையில் வழிபடுதல் உயர்வு என்பது ஷை திருப்புகழில் உள்ள ஒரு கருத்து.

திருஅரங்கத் திருவாயிரமும், அடுத்துள்ள திருமகள் அந்தாதியும் படித்துப் பொருள் கூறி அரங்கேற்றிய சபையில் அனைவரும் மகிழ்ந்தனர். அன்றிரவு திருமகள் இவருடைய மனவெளியில் விளங்கி, அரங்கநாதன் இந்தப் பிரபந்தத்துக்கு விலையாயினன் என்று கூறினள். அருச்சகர் பிரசாதம் உதவி, மேற்கண்டவாறு கூறினர். சுவாமிகள், இதனால் நான் மகிழ்பவன் அல்ல. கண்ணனாக வந்த காலத்தில், பசுக்கள் மழையில் நனையாதபடி மலையைத் தூக்கியும் குடையாகப் பிடித்தும் காத்தவன். அவன், இன்று பல்லாயிரம் பசுக்களைக் கொன்று உண்ணும் கொடுமையைச் சகித்து, உறங்குபவன் போல் இருக்கின்றான். இத்தீமை நீங்க என்று திருவருளாடல் புரிவானோ அன்றே மகிழ்வேன். என்று சொல்லி தமது கருணையையும் திருமாலின் அருளையும் விளக்கினர்.

## 35. அல்லிக் கேணியில் அளித்த கடன்முறி

இதுபோல், திருவல்லிக்கேணியில் பார்த்தசாரதிப் பெருமாள் சந்நிதியில் எழுகூற்றிருக்கைப் பாடல்பாடி அரங்கேற்றினர். அன்று ஒரு பாகவதர் வடிவில் பெருமாள் வந்தனர். ஒரு சீட்டை இவரிடம் பெருமாள் உதவியதாகத் தந்தனர். அதில் எழுகூற்றிருக்கைப் பாட்டுக்காக எழுநூறு பொன் கொடுக்கக் கடமைப் பட்டுள்ளேன் என்று கடன் சீட்டெழுதி. பத்தாழ் வாரது சான்றுகளுடன் கையொப்பமிட்டிருந்ததை கண்டனர். நினைவு வந்தது. ஒரு பதிகம் பாடினர். அதில் பல கருத்துண்டு. கசேந்திரனை யானை கதறிய போதும், துரோபதை அலறியபோதும், சீட்டு உதவவில்லையே. நேரே சென்றல்லவாகாத்தனை. நீதர நினைத்தால் எழுநூறு பொன் அரிதா? கடன் சீட்டு எழுதித் தர வேண்டுமா. உனது சொல்லை நம்பாதவனு அடியேன், இதற்கு ஆழ்வார்கள் சான்று வேறு எதற்கு. என்றெல்லாம் அந்தப் பாடலில் வருகிறது, எந்தக் கடவுளரைப் பாடுவதானாலும் பொருள் ஒன்றே என்ற கருத்தும், எடுத்துக் கொண்ட கடவுள் நிலைக்கேற்ப வரலாறுகளும்; உலக நன்மையான தம் எண்ணமும், பாட்டுக்குரிய, எதுகை, மோனை, சொல், பொருள் அனைத்தும் விரவியே அழகுற அமையும். சிவச் செயலல்லாத திருவருட்சார்பு என்பதில் ஐயமில்லை.

## 36. குமார புரியில் குலவிய செய்தி

குமார புரியில், சண்முக சுவாமிகள் தவச் சாலையிலிருந்த சமயம், தில்லைத் திருவாயிர நூலைப் பதித்து வெளியிட்டால் தமிழுலகத்துக்கு உதவியாகும் என்ற

னர் அன்பர்கள். அவ்வார்த்தையை ஒப்பி, முருகதாச அடிகள், அன்பர்கள் பலர் உதவிய நன்கொடைப் பொருள் மூலம் சென்னையில் பதிக்க ஏற்பாடு செய்ய, அங்கிருந்தவர்கள் பிழை திருத்திப் பதித்து உதவினர். அரன்வாயல் வெங்கட சுப்புப்பிள்ளையின் தம்பியான தங்கவேலுப்பிள்ளை வந்து வணங்கினர். அவரது புலமை ஆகியவற்றைக் கண்டு சந்தயாப் பிறகவிபாடும் புலமையும் கற்பித்தனர். தில்லைத் திருவாயிரத்தில், திருப்புகழ்க் கவியின் இறுதியில் 'பெருமானே என்றமைத்திருந்தனர். முன்பு அந்நூல் அரங்கேற்றிய பெருஞ் சபையில் ஒருவர் எழுந்து நின்று ஒரு சந்தேகம் என்றனராம். சுவாமிகள் அவரை நோக்கி, ஒருவன் புலவன் என்று வெளியே வரும் செயலானது. நாய் ஒன்று திக்கு விசயம் செய்யப் புறப்பட்டது போலாகும். இனத்தைப் பகைப்பது அதன் செயல். புலவனுக்கும் காரணமின்றிப் பலபகை ஒவ்வொரு ஊரிலும் வரும். அவற்றுக்கெல்லாம் தப்ப வேண்டும். அப்படி எத்தனையோ பேரிடம் வாதம், கேள்வி, இவற்றுக்கெல்லாம் பதில் கூறித்தப்பி வருகின்றேன், நீ கேட்கும் வினா யாது என்றனர். அருணகிரிநாதர் திருப்புகழில் "பெருமாளே" என்று சொல்லியுள்ளார். நீங்கள் "பெருமானே" என்று கூறுகின்றீர்களே. இரண்டுக்கும் உள்ள வேறுபாடு என்ன என்றார். உடனே ஒரு உருண்டை தான் என்று கூறினர். அவர், ள, ன என்ற இரண்டுக்கும் வரிவடிவில் நடுவில் சுழி என்றுபொருள் கொள்ள அறியாது மயங்கினர். மற்றையோர் பின் விளக்கினர். பெருமாள் பெருகிய மாட்சியுடையவன். பெருமான் பெருகிய மேன்மையினன். பொருள் ஒன்றே யென்பதாம்.

சண்முக சுவாமிகளுக்கு, சில நாளில் திருமேனி மறைவு ஏற்பட்டது. உடனிருந்து வேண்டும் சிறப்புச் செய்து, திருவுருக்கரந்தானே'' என்றமகுடம் அமையப் பரிபூரணப் பாடல் கூறி அனுதாபம் தெரிவித்தார். அந்தப் பெரியாருக்கும் இவருக்கும் ஒத்த மனப்பண் பாடு உண்டு. அவர் முன்பு, மடத்து முகப்பில் ஒரு விநாயகர் ஆலயம் ஏற்படுத்திக் கும்பாபிடேகம் நடத்தி னர். அவர் விநாயகருக்குப் பெயர் ஒன்றையமைக்க எண்ணினர். மனதில் ஒரு பெயர் தோற்றியது. இருப் பினும் தண்டபாணி சுவாமிகளை நோக்கி விநாயகருக்கு ஒரு பெயர் கூறுக என்றனர். திருவருள் விநாயகர் என்று சொன்னதும், என் உள்ளத்தும் அதைத்தான் நினைத்திருந்தேன். இருவர் உள்ளத்தும் திருவருள் ஒன்றுதானே தூண்டவேண்டியது என்று அமைதியும் மகிழ்வும் கொண்டனர். அந்த நகர மக்கள் சுவாமி களையே அந்த மடத்தின் தலைமைப் பதவியை ஏற்க விழைந்தனர். எனது நிலைக்கு இது பொருந்தாதென்று கூறி, வேறு தக்கார் ஒருவரை நியமித்து வந்தனர்.

## 37. மகப்பேறு வேண்டினூர் மகிழ அருளல்

குமாரபுரியிலிருந்து திரு ஆமாத்தூருக்கு வருவதா யிருந்த சமயம் அருகிற்சிறிது தூரத்தில் உள்ள, மதுரைப் பாக்கத்தில் பெரிய செல்வந்தராயிருந்தவர். துரைசாமி ரெட்டியார் என்பவர். இவரை வந்து வணங்கி தமது பதிக்கு வந்தும் பதிகம் பாடியும் அருள் செய்க என்று வேண்டினர். அதற்கிசைந்து சென்ற னர். திருமால், வீரபத்திரர் என்ற மூர்த்திகட்குப் பாடலியற்றினர். அப்போது தமக்கு மகப்பேறில்லாத செய்தியைக்கூறி வேண்டினர். இவ்வூரில் சிவன்

கோவில் இல்லாத குறைதீர ஆலயம் உண்டாக்கி, குடி நீர்க்குளமும் அமைத்தால், பெண்ணும் ஆணுமான மகப்பேறு உண்டாகுமென்ற கவிகூறித் திருநீறு உதவினர்.

**சாம்பசிவ ரெட்டிஅன்பிற் றந்ததுரை சாமிரெட்டி**
**ஆம்பல்மலர் வாவிஒன்றும் ஆலயமொன் றும்செய்தால்**
**காம்பவிர்தோட் கன்னிஒன் றும் காளையொன்றும் பெற்றிடுவன்**
**நாம்பகர்ந்த தல்லஇது நாமடந்தை சொன்னதுவே.**

என்றபடி பாடல். ஷை ரெட்டியார் குளத்தையமைத்தனர். பெண் சேய் பிறந்தது. ஆண் மகவாயில்லையே என்ற குறையுடன் மரியாதைக்கு, பழ முதலியன கொணர்ந்து உதவினர். அறிந்த முருகதாச அடிகள் அவர் குறைதீர ஒரு பாட்டோதினர்.

**ஏண்சந் ததிபலருக் கீந்தகும ரேசன்உனக்(கு)**
**ஆண்சந் ததியும் அருள்செய்வான். (பிற்பாதி நினைவில்லை)**

குளத்துக்காகப் பெண் சேய், கோவிலுக்காக ஆண் சேய் என்பது பாட்டு வரிசை. ஒன்றுதான் செய்தனர் மற்றொன்று நிகழவில்லை. இன்னும் அந்த மரபினர் உள்ளனர்.

பழனிக்கு அடுத்த வேலாயுதம் பாளையத்துத் தொண்டர் கறுப்பவேலுக் கவுண்டர் சுவாமிகளை முருகனுகவே வழிபடுவார். மகவில்லாக் குறைபற்றி வேண்டினர். அவருக்கும் ஒரு பாட்டு ஓதினர்.

**வேலுக் கவுண்டன் விருப்பப் படிஒருநற்**
**பாலன் பிறக்கும் படிஅருள்வாய்—சீலமறை**
**ஆகமங்கள் போற்றும் அயில்வேற் குருபரனே**
**ஏகபிரான் பெற்றமைந்த னே.**

என்றதாம். அவருக்கும் ஒரு ஆண் மகவு பிறந்து பழனி சாமி என்ற பெயருடன் வாழ்கின்றார். தேவகோட்டை யில் மேலவீடு. சிதம்பரம் செட்டியார் என்பவர் மிகப் பேரன்பர் பலவிதத்தில் உதவி செய்தவர். அவருக்கும் இக்குறையிருந்தது. அப்படியே அருள்வாக்கு உதவி னர். பாட்டு வழக்கத்தில் தெரியவில்லை. அப்படியே ஆண் சேய் பிறந்தது என்பது முன்னமே சொல்லப் பட்டுள்ளது. அம்மரபினரும் வாழ்கின்றனர். தமது மூத்த சகோதரி, இவர் வேலாயுத பூசனைக் காலத்தில் அபிடேகித்து அலங்காரம் செய்யும்போது வந்து மகப் பேறில்லாமையைக் குறிப்பிட்டனர். வேலாயுதத்துக் கணியும், திருநீற்றில் ஒரு பகுதி உதவி விருப்பப்படி ஆண் மகவு பிறக்கும், "சிவகுரு என்ற பெயர் இடுக" என்று கூறினர். அப்படியே பிறந்தது அப்பெயருடன் இருந்தனர். அந்த மரபினரும் உள்ளனர். சுவாமிகள் புதல்வி, ஈசுர வடிவம்மாளுக்கும் மகப்பேறு எய்தாம லிருந்தது. அதுகண்டு ஆசிகூறினர் ஆண் மகவு பிறந்து இவரது முருகதாசரென்ற நாமமிடப் பெற்றிருந்தனர். இந்த மரபினரும் வாழ்கின்றனர்.

> **மன்மதனைப் போல்விளங்கும் மாப்பிளைபால் வாழ்ந்துவக்கும்**
> **என்மகட்குப் புத்திரப்பே றீந்தருள்வாய்—வன்மனத்தோர்**
> **காணுமுருகா கதிர்வேலைக் கைப்பிடித்து**
> **மாணூர் மயிலுகைப்ப வா. என்பதாம்.**

திருவருள் வசப்பட்ட நிலையில் எது கூறினும் பலித மாகும் என்பதில் என்ன ஐயம்?

## 38. திருவா மாத்தூர் சென்று தங்குதல்

மதுரைப் பாக்கத்திருந்து, தண்டபாணி சுவாமி கள், கோமாதுருபுரம் என்று வழங்கும் திருஆமாத்

தூர்த்தலத்துக்குத் தொண்டர்கள் சூழ, வண்டியில் அமர்ந்து சென்றனர். அரிகரபுத்திர முதலியாரது கனவில் சுவாமிகள் வருகை கூறி அவர் மனம் மகிழும் படி பணிபுரிக எனப் பரமன் உத்தரவிட்டார். உரத் தூர், சின்னு ரெட்டியார் இவர் வழிபாட்டுக்கு வேண் டியவற்றைச் சேகரித்து வைத்து முதலியாருடன் எதிர் பார்த்தனர். சுவாமிகள் வந்தவுடன் முன்னமே அமைந்து அங்கிருந்த ஒரு கூரைவேய்ந்த மடத்தில் அமர்வித்தனர். நாளும் தமது பூசனைகளை முடித்து, அபிராமேசர், முத்தாம்பிகை சந்நிதி சென்று அன்பர் களுடன் வழிபட்டு வந்தனர்.

**பசுக்காப்புச் செய்துநெடும் பாரூர் பவற்றை**
**நசுக்காமை ஆதிநிலை நாட்டி—முசுக்கோமான்**
**போல்வாழ் ஒருவன் புகழ்விளக்க வேண்டும்காண்**
**சேல்வாவி மாதையர சே.**

என்ற வெண்பா ஓதித்துதித்தனர். முற்காலத் தில் பசுக்கள் பூசித்துக் கொம்பு பெற்ற காரணத்தால், பசுக்களுக்குத் தாய் ஊர் என்ற பெயர் கொண்ட அத் தலத்தில், உள்ள நீரே, பசுக்களின் துயரை நீக்கவேண் டும், அது பெற்றாலன்றி இத்தலத்தை விட்டு எல்லை தாண்டேன், என்ற ஆணையை இறைவன் முன்செய் தனர். ஆயிரம் கவி உம்மீது பாடுவேன் சைவசமயத்து நால்வர் கட்கு வழங்கிய திருவருளைக் கொடுத்தருள வேண்டுமென்று அடிகள் வேண்டினர். அந்நாளில் இவரது நிட்டையில் பெருமான் தோன்றி "கவிபாடு வது பின் பார்க்கலாம். அப்பயன் பெறுதற் கேற்ற தவத்தை முதலிற் செய்" என்று ஓதினர்.

அதுகண்ட முருகதாசர் ஆறெழுத்து மந்திரத்தைக் கோடி உருச் செபிப்பதாக எண்ணினர். அம்முறையில்

தவமியற்றினர். ஓர் நாள் செபமாலையை எடுக்கும் போது கருந்தேள் ஒன்று வலக்கையில் தாக்கியது. அதனால் தெளிவு ஒன்று ஏற்பட்டது. மந்திரத்தை ஓதிச் செபமாலையைச் சுழற்றி, கணக்குச் செய்வது வேண்டாம், மனதில் மாறாத தியானபாவனையை மேற்கொள்ளுதலே சிறப்பு, என்று பெருமான் உணர்த்தியதாகச் சிந்தித்தனர். அதுமுதல் தியானம் செய்தனர்.

> **தேளாகி வந்தும் தெளிவுணர்த்தும் தெய்வத்தால்**
> **தாளாண்மை யொன்று தலைக்கொண்டேன்—வாளா**
> **உருச்செபித்துச் சோர்வதினும் உள்ளத்தால் நாடும்**
> **திருச்செயலே மேலெனத்தேர்ந் தே.**

என்னும் வெண்பா ஒன்றோதினர். இலக்கம் உருவுக்கு ஒரு கவிவீதம் பாடிவந்த 'தண்டபாணி அநுபூதி" என்னும் நூலை முப்பத்தாறு கவிகளில் நிறைவாக முடித்து விட்டனர். முருகதாசர் அநுபூதி என்று தமது அநுபவங்களை வெளிப்படுத்தி நூறு பாடலில் ஓர் நூலியற்றினர். வடமொழியிலிருந்த வரலாற்றினைக் கொண்டு, தலபுராணம் 1000, பாடலில் இயற்றினர். சதகப்பதிகம் 1000, பதிகச்சதகம், 1000 பாடல்களில் இயற்றினர். யமகம், திரிபு, சிலேடை, போன்ற அந்தாதிகள் பதிகங்கள் பலவாகும். புலவர் புராணம் பாடியதும் இத்தலத்திலிருந்தே என்பது தெரிகிறது.

## 39. கண்ஒளி எய்தக் கவிதை கூறுதல்

திருப்பாதிரிப் புலியூருக்கு அணிமையில் உள்ள, வண்டிப்பாளையத்தில் உள்ள, வீரசைவப் பேரன்பர்

மல்லையரென்பவர். சுவாமிகள் மீது மிகுந்த உரிமையுடையவர். வினைவசமாகத் தனது கண்களில் பார்வையிழந்து வருந்தினர். பலர் கருத்துக் கிணங்கி, சென்னை சென்று மருத்துவ உதவி பெற எண்ணியிருந்த சமயம், திருவாமாத்தூர் வந்து சுவாமிகளிடம் குறை கூறினர். ஓர் பாட்டுக் கூறி நீறுதவினர்.

**மல்லைய னுக்கு மலர்விழியின் பார்வைநல்கித்**
**தொல்லைவினைத் துன்பம் துடைத்தருள்வாய்—அல்லைநிகர்**
**கண்டத்தான் மைந்தா கதிர்வேற்கைக் காவலவா**
**அண்டத்தார் சேனையதி பா.**

என்பதாம். சிலநாளில் பார்வை தெரியப் பெற்று மகிழ்ந்தனர் மல்லையர்.

சிவாலயத்தில் நடைபெறும் விழாக் காலங்களில் ஏற்படும், திருவுலாவில் மூர்த்திகள் இவரது மடத்தின் முன்வரும்போது, சமயம் போல் புதுப் பாடல் கூறி வணங்குவது வழக்கம். பலரும் கேட்டு மகிழ்வர். அங்கு நடைபெற்ற கும்பாபிஷேகத்தின் போது முருகப்பெருமானுடனிருந்த வள்ளி தெய்வயானையம்மைகளின் விக்கிரகம் களவு போயிற்று. அது திரும்பி வரும் வரை கோயிலுக்குள் செல்வதில்லையென்று உறுதி பூண்டனர். பலமுயற்சி செய்தும் பயனில்லை. கந்தசட்டிவிழா நேர்ந்தது. முருகன் மட்டும் உலாவந்தார்.

**பத்தினிமா ரைப்பிரித்த பாவிகளைக் கொல்லஎன்றோ**
**சத்திவேல் ஏந்திச் சமர்மீதிற் செல்கின்றாய்**
**எத்திசையும் போற்ற இனிது வரச் செய்தருள்வாய்**
**நித்தியர்ஆள் ஆமாத்தூர் நீலமயில் வாகனனே**

என்ற கவியைக் கூறினர். இது போற்பல பாடல் உள்ளன. சிலவருடங்கள் கழித்தபின் வேறு புதிதாய் மேற்கண்ட அம்மன் இரண்டும் சுவாமிகள் புதல்வ ரான செந்திறையக சுவாமிகள் முயற்சியால் செங்குந்த அன்பர்கள் மூலம் செய்யப்பெற்று விழா நலமுடன் அமைந்தது. சிறப்பு விழாக்காலங்களில் தம் நகரத்துக்கு வருமாறு இவரை வரும்படி பல தொண்டர்கள் விரும்பி அழைப்பார்கள். அக்கால் தமது கருத்தை விளக்கிக்கூறிய பாடல்.

**எத்தலமும் எத்தேவும் ஏகமெனத் தேர்ந்தபின்னும்**
**இத்தலமேல் அத்தலமேல் என்றிடேன்—கைத்தலத்து**
**நெல்லிக் கனிபோல் நிசஅருட்பே றுற்றபின்னே**
**சொல்லிக் குதிப்பேன் துணிந்து**

எனக் கூறிவிடுத்தனர். தாம் வெளியே போகாத காரணத்தால், அவரவர் விருப்பப்படியே மாதையிலி ருந்து பதிகம் பாடியும் உதவினர்.

## 40. சண்முகம் பிள்ளை தனக்கருள் புரிதல்

திருவாமாத்தூருக்கு அடுத்த விழுப்புரத்தில், தாசில்தாராக அலுவல் பார்த்தவர், சண்முகம்பிள்ளை யென்பவர். திருநெல்வேலிச் சைவமரபினர். நாடு-மரபு-முதலிய தொடர்புகொண்டு இவரிடம் அடுத்து வந்து நட்புக் கொண்டனர். நீண்ட நாளாகத்தாம் வயிற்று வலியால் வருந்தும் செய்தியை விண்ணப்பித் தனர். அது வினவிய சுவாமிகள், விநாயக மந்திரத்தை உபதேசித்து, தினமும் விநாயக பூசை செய்யும்படி கூறி, விநாயகர் கோயில் வழிபாடு செய்யவும் ஏற்பாடு செய்தனர். அன்றியும்,

தும்பிமுகத் தைந்துகரத் தொந்திவயிற் றம்மானே
நம்பி உனைத்தினமும் நான்பணிவேன்—வெம்பிவரும்
நோயும் பகையும் நொறுங்கத் தகர்த்துன்அன்பர்
ஏயும் சுகமளிப்பா யே

என்ற பாட்டினை எழுதிக் கொடுத்துப் பாரா யணம் புரியும் படியும் அருளினர். அதன்படி வயிற்று வலி தீரப்பெற்ருர் சண்முகம்பிள்ளை. அவர் இவர் பேருக்கு, புறம் போக்காயிருந்த காலி நிலத்தை மடாலயம் அமைப்பதற்கென இனமாக வழங்கினர். அவ்விடத்தில் மடம் அமைக்க அன்பர்கள் பலர் விரும்பி, விண்ணப்பித்தனர். உலகம் பூராவும் எனது மடம். சந்திர சூரியர்களே மடத்தின் இருபேரொளி விளக்குகள், எல்லா உயிர்களும் எனது துணைவர்கள். எனக்கென்று எதுவும் தேவையில்லை. எல்லா உயிர் களும் இன்புறவாழ்வதே என் இனிய வாழ்வு. அதற் காகவே என் கடமையாக இறைவன் அருளை வேண்டித் தவம் செய்கின்றேன். அது செய்யுமுன் முத்தியைத் திருவருள் உதவினும் அடைய விழையேன் என்று கூறினர். மேலும் தொண்டர்கள் வற்புறுத்தி, வரும் தொண்டர்கள் இருந்து பணியாற்றுவதற்கு ஒரு இடம் இருப்பது வேண்டுமென்று வேண்டினர்.

திருவருட்சம்மதம் அப்படியிருக்குமாஞல் செய்க! என்று, பின் விளைவுகருதி விடையளித்தனர், அத் தலத்துக்கு வடமேற்குத் திசையில், முன் சண்முகம் பிள்ளையால் உதவிய மனையானது, உயர்ந்த மண்மேடா யிருந்தது. வீரகோளம் புதூர்-ஜமீன்-இருதயாலய மருதப்பத் தேவர், இவர் பேரன்புக்குரியவர். ஆதலால் அவரது பொருளுதவி கொண்டு செப்பம் செய்து, ஒரு

இடத்தில் கட்டிட வேலை தொடங்கி நடைபெறலா யிற்று.

## 41. சிவமா யமையும் திருவருட் பேறு

அந்நிலையில் ஆறெழுத்து மந்திரத்தை ஏழுகோடி செபித்து, தெய்வத்தை முன்னிலையாகக் காண வேண்டுமென்ற அவாமேலெழுந்தது. நாளும் முப்ப தாயிரம் வரை செபித்து வந்தனர். அவ்வாறு நிகழும் சமயம், கலியுகத்து ஐயாயிரமான விளம்பி வருடம் தொடங்கியது. அந்த ஆண்டில் தெய்வீகச் செயல் நிகழுமென்று முன்னோர் கூறிய மொழியைக் கருதி. "ஐயாயிரப் பிரபந்தம்" பாடத்தொடங்கினர். சண்மத சமயாதீதபரமாக நாளும் பதினான்கு பாட்டு வீதம் கணக்குச் செய்து, பாடி வந்தனர். அந்த வருடம் முடியும்போது ஐயாயிரம் பாட்டு முடிவாக வேண்டு மென்பது கருத்து. முற்பகலில் கவிபாடி ஏட்டில் எழுதுவர். பிற்பகலில் மந்திர செபம், உச்சிப் போதில், நீராடி-நியம முடித்து, சண்மதக் கோலமான, திருநீறு திருமண் - குங்குமம். கோபி. இவற்றையெல்லாம் மேனியில் முறையாக அணிந்து கொள்வர். அன்றியும் ஏனையவாகச் சொல்லப்படும் புறச் சமயங்கள் ஏதா யினும், கொலை-புலையுணவு. இம்சை. என்ற மூவிதக் கொடுமையில்லாதனவானால் அவற்றையும் ஒப்புக் கொள்வேன் என்னும் குறிப்பினை விளக்க இரண்டு முழந்தாள்களிலும் மும்மூன்று கரும்புள்ளிகள் வைத்துக் கொள்வதுமாயிருந்தனர்.

திருநெல்வேலியில் தொடங்கிய கிணறு பாறை யானது கண்டு, அதில் நீரெடுத்து தமது வழிபாட்டுக்

குரிய வேலாயுதத்துக்கு அபிடேகித்தன்றி சோறு அருந்துவதில்லையென்ற கடும் விரதம் பூண்டிருந்தனர். அரிசி சம்பந்தப்பட்ட எதுவும் கொள்வது இல்லை. பச்சைப்பயறு, உளுந்து சேர்த்துச் செய்யும் இட்டிலி, தோசை இவற்றையே உண்டு வாழ்ந்தனர். இப்படிப் பல ஆண்டுகள் கடந்தன. சதாதெய்வ சிந்தனை. உலகநன்மை கருதிய எண்ணம். திருவருள் செய்யும் சோதனை, செபதவம், பாட்டெழுதல், இவை ஒவ்வொன்றும் மிகுதிப்பட்டது. உடல் நிலை தாங்கவில்லை. சூடு அதிகரித்தது. அதற்காகத் தாம் கொண்ட கருத்தைத் தளர்த்திஞரில்லை. நன்னாரி வேர்க் கஷாயம் அருந்துதல் நலமென்று கொண்டனர். அக்கால் ஒரு பாட்டு ஓதினர்.

**நன்னாரி யென்னும் நாமம் நாமகள் தனக்கோ வாசப்**
**பொன்னுடை மாயன் மார்பிற் பொருந்தினள் தனக்கோ, ஈசன்**
**தன்ஆகப் பாதி யாட்கோ சாற்று(ம்)மூ வருக்குந்தானே**
**அந்நாம மூலிநோய்தீர்த்த ருளுமென் றயில்கின்றேனே. என்பதாம்.**

உடனிருந்த உண்மைத் தொண்டர்கட்கு இது மிகவும் மனச்சோர்வினைத் தந்தது. வணங்கி வற்புறுத்தி இவற்றை நிறுத்தும் படி மிகவும் கேட்டுக் கொண்டார்கள். எழுதத் தொடங்கிய ஏட்டுக் கட்டையும், செபமாலையையும் வேலாயுதக் கடவுள் பீடத்தில் வைத்து, உன் சம்மதம் இதுவானால் என் செய்வது என்று சொல்லி வணங்கினர். மந்திரசெபமும் இரண்டரைக் கோடிக்குப் பக்கமாயிற்று. ஐயாயிரப் பிரபந்தமும் ஆயிரம் பாடலுக்கு மேல் ஆயது. இவை யிரண்டு செயலும் நிறைவு பெறுமானால் சுவாமிகள் விரும்பிய பயன்கள் கை வந்தேயிருக்கும். அவை

ஏயதினுல் உலகம் நன்மை பெறும். துன்பம் தீரும். திருவருள் வடிவமான தெய்வம், நீதியையும் கருணையையும், உலகப் பொதுவான உயிர்களுக்கு நடத்தும் காலமும் அளவும் கண்டு உதவும். ஆதலால் முருகதாசரைத் தனது அண்மையில் அமைத்துக் கொள்ள எண்ணியது போலும்.

கலியுகத்தின் ஐந்தாவது ஆயிர நிறைவாக உள்ள, விளம்பிவருடம். ஆனிமீ 23உ (1898) செவ்வாய்க்கிழமை துதியைத் திதி திருவோண நட்சத்திரம் கூடிய நன்னாள் இரவு அருட்பெருஞ்சோதியான பரவெளியில் மேல் நோக்கி ஒளிவடிவாகச் சென்று முத்தியுற்றனர். அப்போது சுவாமிகளுக்கு வயது ஐம்பத்தொன்பது ஆயிற்று.

சுவாமிகள் புகழ் அழியாப் புகழுடம்பாகியது சூக்குமமான வடிவும், செய்தருளிய பல நூல்களும், நடத்திய பல செயல்களும் இருந்தாலும், தூலமான விவகாரத்தளவில் கவனிக்கும்போது, சுவாமிகளது பிரிவு தமிழுலகத்துக்குப் பெரிய நட்டமேயாகும். இது வரை இவ்வுலகத்தில், இரக்கம், பக்தி, கல்வி, ஞானம் முதலிய நற்குணம் அமைந்த உத்தமப் பெரியோர்கள் பலர் தோன்றி, இருந்து மறைந்தனர். இது உலக இயல்பு. ஆயினும், நமது வண்ணச் சரப வள்ளலாகிய தண்டபாணி சுவாமிகளிடம் சிறப்பாக இருந்த குணம் பலவாம்.

**“ வேதம் சொல்லினும் விரிஞ்சன் ஆதியர்**
**நேரிற் கூறினும் நீசர்க்கு உரித்தாம்**
**கொலைபுலை செய்தல் கூடாது அன்றே ”**

**சத்திய சூத்திரம்.**

என்னும் உறுதியும், தன்னையடைந்தோர்களது குறை தவிர்த்தலே, தான் முத்தியடைவதினும் சிறந்த தென்னும் கருணையும், கவன குளிகையிட்டு ஆகாய மார்க்கமாகச் செல்லும் சித்தர்களாயினும், சீவகருணை யில்லாமல் தன்னலம் கருதுபவர்களாயின், அவர் தகுதி கழுகு, காகம், போல்வதென்றும், குகையில் அடைந்து கிடக்கும் சித்தர்களானால், எலி, பெருச்சாளி போல் பவரென்றும் கூறி, அவர்கள் அருள் வலிமையுற்றிருந் தும் பயனற்றமை கருதி மனம் வருந்துவர். தன்னை நம்பிய தொண்டர்கள், தான் அருட்செயல் பெற்ற காலத்தில் எந்தவுலகத்தில் எந்தவுடலோடு இருந்தா லும் அழைத்து, முன்னைய உணர்வினை நல்கி, காக்க வேண்டுமென்ற தீவிர குணமுடையவர். பசுக்கொலை, சிசுக்கொலை முதலிய தீங்குகள், தெய்வத்தின்பெயரால் நடைபெறும் கொலை புலைகள், உலகத்தில் அறவே நீங்கும்படி திருவருட் சித்தியால் இயற்றும் குமாரத் தன்மையாகிய சொருப சித்தியைப் பெறுமல்தான் மட்டும் இன்புறும் பேரின்ப முத்தி, மரணத்தோடு ஒக்குமென்பர். சதகவுந்தியில்.

**சித்திஒன் றேனும் தெரியப் புரிந்திடான்**
**முத்தியும் சாவேயென் றுந்தீபற.**

என்றவாறு இவரது நூல்களில் காணக்குலவும் சிறந்த கருத்துக்கள் பல. "கொலையிற் கொடியாரை வேந் தொறுத்தல் - பைங்கூழ், களை கட்டதனொடுநேர்." என்றபடி அருள்நெறியில் வராத ஒரு சிலரை, மறக் கருணையால் ஒறுத்தாவது வழிப்படுத்த வேண்டு மென்ற கருத்தால் சிலவிடத்துக் கடிந்தும் கூறுவர்.

## 42. ஆலயம் அமைத்து அன்பர்கள் வழிபடல்

சுவாமிகள் திருமேனியை அன்பர்கள் பலர்கூடி, முறைப்படி அபிடேகித்து அலங்காரம் செய்து, பூசனை யியற்றி, மடத்தின் வடபுறம் சுவாமிகள் முன்னமே குறிப்பிட்டிருந்த இடத்தில் குகையமைத்து, திருநீற் ருல் மறைத்து, மேலே சிவலிங்கம் நிறுவி வழிபாடு செய்து வருவதாயினர்.

அக்கால், சுவாமிகளது புதல்வராய் உள்ள, தி. மு. செந்திநாயக ஐயா அவர்கள், பதினன்குவயதுப் பருவமாய் இருந்தனர். இவரிடமே, திருவாமாத்தூர் திரிவந்தாதி, யமக அந்தாதி, முதலியவற்றைப் பாடங் கேட்டனர். கணக்கிலும் பயிற்சி பெற்ருர். புதுப் பாடல்கள் பாடும் பண்பும், இயல்பாய் அமைந்திருந் தனர். ஆறெழுத்து உபதேசமும் பெற்று, சுவாமிகள் கண்காணிப்பில் புலமை நலமெய்தி விளங்கினர். சுவாமி கள் பிரிவு பற்றிப் பல புலவர்கள், பரிபூரணப் பாடல் பாடினர். இவரும் பாடினர்.

சிரவணபுரம் ஸ்ரீ இராமானந்த சுவாமிகள், முன்பு பழனித்தலத்தில், சுவாமிகளிடம் உபதேசம் பெற்று, மேலான தவநிட்டையில் வல்லவராய், பல்லாயிரம் மாணவர்கட்கு அருள்நிலை விளக்கி வருவதாயினர். இவ்விவரமறிந்த அவர் திருவாமாத்தூர் வந்து, குரு நாதரது பிரிவுக்கு மனம் பெரிதும் வருந்தினர். சுவாமி கள் வாழ்க்கைத் துணையாயமைந்த சுந்தரத்தம்மை யவர்களிடமும், அவரது தவப்புதல்வரான செந்திநாயக ஐயா அவர்களிடமும், மன ஆறுதல் கூறி அமைதி யுற்றனர். பின் அந்த இடத்தில் ஆலயம் நிறுவி,

தண்டபாணிக் கடவுள் திருவுருவைத் தாபித்து, நித்திய பூசனைக்கு நிலம் வாங்கி உதவியும், வழிபட வரும் அன்பர்கட்கு வேண்டிய உணவு வசதிகளைச் செய்தும் இருந்தனர்.

செந்திநாயக ஐயா அவர்களைக் கொண்டு, குருநாதர் செய்தருளிய சாத்திர, சரித்திர, தோத்திர நூல்களை வெளியிடச் செய்தும், அன்பர்களைக் கொண்டு சில அறச்செயல்களை இயற்றும்படி ஏற்பாடும் செய்தனர். சிரவணபுரத்துள்ள, கௌமார மடாலயத்திலும் குருநாதர் திருவுருவப்படம் நிறுவி, தமது நித்திய வழிபாட்டில் ஈடுபட்டும், சாத்திர நூல்களைப் பயன்படுத்தியும், குருநாதரது பிரதி பிம்பமாக விளங்கினர் இராமானந்த சுவாமிகள்.

அதுமுதல், திருவாமாத்தூர் தண்டபாணி சுவாமிகள் ஆலயத்தில், நித்திய வழிபாடு, சிறப்பு வழிபாடு, குருபூசை, தைப்பூசம் சஷ்டி, ஆகிய நாட்களில் திருவுலா, அன்னம்பாலித்தல் ஆதியன, சுவாமிகள் புதல்வரான தவத்திரு. செந்திநாயக சுவாமிகளாலும், அவர்கட்குப்பின் அவரது மரபினராலும் நடத்தப் பெற்று வருகின்றன. சுவாமிகள் பாடிய பாடல்களின் ஏட்டுச்சுவடிகள் 50 வரை 50,000 கவிகளில் உள்ளன. அவையும் பாதுகாக்கப் பெற்று, அன்பர்கள் அச்சிட்டுப் பயனடையும்படி, எழுதி வழங்கப் பெறுகிறது. நூல்களின் விவரம், தலங்களின் விவரம் விளங்க, ஒரு நூல் பதித்து வெளியிடப் பெற்றிருப்பதால், அந்தந்தத் தலத்து அபிமானிகள் பெற்றுப் பதித்து உலகுக்கு உதவுதல் நலமாகும். திருவருள் துணையிருந்து எல்லோருக்கும் எல்லா நலமும் உதவுவதாக.

தி. மு. செந்திநாயக சுவாமிகள், சுவாமிகளின் வரலாற்றை இனிய விரிவான நடையில் இன்னும் பல வித அருட்செயல்களை விளக்கி எழுதி வைத்துள்ளனர். குறுகிய அளவில் எழுதிய படிவத்திலிருந்து புத்துருவம் பெற்று இப்பதிப்பு வெளியிடப் பெறுகிறது, தண்டபாணி விஜயமென்று ஒருநூல் 500 பாடலில் அவர் இயற்றியுள்ளனர். சுவாமிகள் 25-வது குருபூசையில் அது பதித்து அரங்கேற்றப் பெற்றது. பெரியவரலாறு பதிக்கத் திருவருளை வேண்டியுள்ளோம். காலம் கூடுவதாக. வாழ்க திருவருள்! வளர்க தமிழ் மொழி !!

தெய்வமே துணை.



# தண்டபாணி சுவாமிகளிடம் ஆறெழுத்து உபதேசமும், புலமையும் பெற்ற மாணவரில் தெரிந்த சிலர்

## (சிரவணபுரம் கௌமார மடாலயம் ஆதிமுதல்வர்)

1. அருள்மிகு. இராமானந்த சுவாமிகள் உபதேசம்

2. அஷ்டாவதானம். பூவை. கலியாண சுந்தரய தீந்திரர் சென்னை, புலமையுடன் உபதேசம்.

3. வண்ணக் களஞ்சியம். நாகலிங்க முனிவர் சென்னை புலமையுடன் உபதேசம்.

4. சண்முகதாச பிள்ளை, கோபால சமுத்திரம் திருநெல் வேலி, (மருகருமாவர்) புலமையுடன் உபதேசம்.

5. சித்திர புத்திரப்பிள்ளை, திருநெல்வேலி (உடன்பிறந்த தம்பி) புலமையுடன் உபதேசம்.

6. சின்னு ரெட்டியார்,உரத்தூர். புலமையுடன் உபதேசம்.

7. சந்தப்புலமை தி.மு. செந்திநயக சுவாமிகள், புதல்வர் புலமையும் உபதேசமும்.

8. பெரியசாமி நாடார், உடுமலை. உபதேச மட்டும்.

9. சுப்பையசாமி, உடுமலை. உபதேச மட்டும்.

10. வரதராசப்பிள்ளை, ஆரியூர். உபதேச மட்டும்.

## சந்தப் புலமை மட்டும் பெற்ற மாணவர்களில் தெரிந்த சிலர்

1. அரண்வாயல், வேங்கடசுப்புப்பிள்ளை, ஆசுகவிப்புலவர்.
2. அவரது தம்பி. தங்கவேலுப்பிள்ளை, ஆசுகவிப்புலவர்.
3. இராமகிருஷ்ணப்பிள்ளை, கழுகுமலை.
4. கந்தசாமிப் புலவர், ஊற்றுமலை சமீன் புலவர்.
5. கந்தசாமி சுவாமி, சோழவந்தான்.

## பட்டம் உதவிய விவரம்

1. கலியாண சுந்தர யதீந்திரர், சிந்தாந்த சரபம்
2. நாகலிங்க முனிவர், வண்ணக் களஞ்சியம்.
3. முத்துசாமிக் கவிராயர், உடுமலை, கொங்குப்புலி.
4. வேங்கட சுப்புப்பிள்ளை, வெண்பாப்புலி.

## பழகிய புலவரான அன்பர் சிலரது விவரம்

1. வடலூர் இராமலிங்க சுவாமிகள்.
2. சங்கரதாஸ் சுவாமி, நாடக நூல் ஆசிரியர்.
3. மாம்பழக் கவிராயர், பழனி.
4. மனோன்மணியம்மாள், பண்டிதை சென்னை.
5. அழகிய சொக்கநாதபிள்ளை, போற்றி முத்துப்பிள்ளை ஆதியோர் திருநெல்வேலி.)
6. மீச்சுவையர், வேம்பத்தூர்.
7. புரசை. அட்டாவதானம், சபாபதி முதலியார்.
8. ஞான சித்தசாமி.
9. வன்றொண்டன் செட்டியார், தேவகோட்டை.

மேற்கண்டவற்றுள் ஒரு தகுதி பெற்றவர், இரண்டும் பெற்றவர், மூன்றும் பெற்றவர்களாயிருக்கின்றனர். புலவர்கள் அன்பர்கள் எல்லோரையும் குறிக்க இதில் இடமில்லை. விரிவில் ஓரளவு காணலாம். பல தெரியாததும் உண்டு, சுவாமிகளே, "என் சரித்திரம் எத்தனையோவுள" என்று குருபர தத்துவம் என்ற நூலுட் கூறுகிருர். அவர் கூறியதே முற்றுமில்லை. செந்திநயக சுவாமிகள் தெரிந்தெழுதியவை பல, தனிக்கவிகள் சில. இதனுட் குறித்தவை சில்வேயாம்.

## கலப்பை பட்டியில் அத்தான் வீட்டுத் தோசை புதுமாவினுல் அமைந்தது பற்றிய கவி

ஆட்டுரலின் மாவை அடுப்பில்வைத்த கல்மீது
போட்டு வெதுப்பிப் புசித்தோமே—காட்டுக்குள்
கத்தூரி வாசம் கமழும் கலப்பைபட்டி
அத்தான் விரதமத னுல்.

## தேவகோட்டை ஐயர் வீட்டுத் தோசை பற்றிய கவி

தென்னர்புகழ் சீர்குலவு தேவகோட் டைப்பதியிற்
சொன்னம் ஐயர் வீட்டிலுள்ள தோசையே—உன்னை அயன்
கண்(டு) ஆலிலை வகுத்த காரணமோ நீஅதைக் (கண்டு)
உண்டாயி னுயோ உரை,

## ஒரு சைவர் வீட்டு உணவு குறித்தது

கோட்டூரிற் சைவன்முகம் கோணுமற் கூடத்தில்
ஈட்டு தென்னை ஓலை இலைகொணர்ந்து—போட்டெனக்குச்
சோறும் இலைக்கறியும் சுண்டைக்கா யும்பருப்புச்
சாறுமிட்டுப் பெற்முன் தவம்.

## தன்னிலை விளக்கல்

பெயர்முறையிற் பாட்டி, தொண்டு பெற்ற பண்பில் அன்னை
நயமொழியினுல் மாமி, தங்கை நண்பில்—கயல்போல்
விஞேதவிழிப் பார்வையில் விண்ணங்கார் மெச்ச
மஞேன்மணி யென் றுள்ள மகள்.

## செந்திஞயகர் இளமை விளையாட்டை நீக்க அருளியது

கொத்த வரைச் செடியைக் கொண்டையள வாய்முறித்த
கைத்தலமே என்சொல் கருதிக்கேள்—பத்தர்க்(கு)
அருள்புரியும் ஆனைமுகத் தம்மானைக் கும்பிட்(டு)
இருள்வினைகள் செய்யா திரு.

## ஆறுபடை வீடும் அமையப் பாடியது

பழனியப்பா ஏரகத்தப் பாசெந்தில் அப்பா
அழகுமலி சோலைமலை அப்பா—கழகம்
புகழ்பரங்குன் றப்பா பொருப்பினங்கள் தோறும்
திகழும்அப்பா நீ கருணை செய்.

## பொடியை வியந்து புகன்றது

எதுப்பாவை யத்தோரை ஈடழிக்கும் செவ்வேள்
புதுப்பாவை யத்துப் பொடியை—மதுப்பூந்தார்த்
தேவர்களும் சித்தர்களும் செஞ்சடையான் ஆதியராம்
மூவர்களும் கொள்வார் முகந்து.

## தூக்கம் வருகின்றது எனப் புதல்வர் கூறியபோது முற்பகுதியைக் கூறியது

சத்தி வடிவேற்கைச் சண்முகனைச் சந்ததமும்
நத்தியெழுத் தாறும் நவின்றிட்டேன்—சித்தியுடன்
ஆக்கம் பெருக்கி அருள்விளைக்கும் மெய்ஞ்ஞானத்
தூக்கம் வருகின்ற து.

## தம்குறை கூறல்

கந்தப்பா வேலப்பா கான மயிலப்பா
எந்தப்பா நெய்தாலும் என்றனக்கு லாபமில்லை
முந்தப்பாக் கேட்ட முதல்வன்மகன் நீயாகில்
சந்தப்பாக் கேட்டெனக்குத் தக்கபயன் ஈவாயே.

## வேட்டவலம் ஜமீன் பண்டாரியாருக்கு எழுதியது

நானெழுதும் காகிதங்கள் நான்கினுக்கும் நீயொர்பதில்
ஏனெழுதி டாமல் இருக்கின்றாய்—மீனெழுதும்
கேதனத்தான் என்னக் கிளர்சக் கரையப்பா
ஈதழகன் றுன்றன் இசைக்கு.

தமிழ்மொழியிற் புலமை நிரம்பிய தண்டபாணி சுவாமிகள் இந்திமொழியும் பயின்று தமிழிலக்கண வரம்புப்படி பாடலியற்றியுள்ளனர். நெல்லையில் சுவாமிகளது இல்லத்திருந்த துண்டு ஏட்டில் எழுதப் பெற்றிருந்தது இந்த இரண்டு பாடல்களும்.

## குமாரசாமி சங்காத்ரஹ

பொருள் : குமாரசாமி என்னுடன் இருக்கவேண்டும். என்பதாம். குமாரசாமி துணை. என்ற கருத்து.

### வெண்பா—1

பத்தர்மே பாணிதேவ் பாராஆத் மேபாலா
அத்தர்பூல் பேன்கர்அவ்வல் ஆயாநை—அத்தீபாய்
பாணிசிர்ப்பர் ரக்யாய்சே பக்கீர்சா யேப்பேட்டா
ப்(பு)ராணேதில் சேயேக்பாத் போல்.

### பொருள்

பத்தர்மே - கல்லில். (பாறையாயிருக்கிற இடத்தில்) இவர் எடுத்த கிணறு பாறையாயிருந்தது.
பாணிதேவ் - ஜலம் கொடு. (நீர் தோன்ற அருள்வாயாக.)
பாராஆத் - பன்னிரு கரங்களையுடைய.
மே பாலா - ஏ குழந்தாய் !
அத்தர், பூல் - மணம் கமழும் பூமாலையை.
பேன்கர் - அணிந்து கொண்டு.
அவ்வல் - என் முன்பாக.
ஆயாநை - வரவில்லையே.
அத்தீபாய் - யானைமுகனுக்கு இளையவனே !
பாணி சிர்ப்பர் - சிரசின் மீது நீரை (கங்கையை)
ரக்யாய் சே - தரித்துக்கொண்டிருக்கிற.
பக்கீர்சாயேப் - பக்கீர்சாயபுவினுடைய (ஆண்டியாகிய சிவபிரானது).
பேட்டா - மகனே.
புராணே தில்சே - பழமையான உன் மனதில் நின்றும்.
ஏக்பாத் போல் - ஒரு வாக்குக் கொடுத்தருள்வாயாக.

## வெண்பா—2

அத்மியாஞ்சொப் மேரேபாஸ் ஆஞசா ஞதேரா
கொத்பாமிஞ் சேவோஞ கோடேபர்க்—கத்லம்பே
பாலா லடாய்முர்கை பக்கரா சங்காத்ஷோக்
சோலாரூப் வாலாபாத் சுன்.

### பொருள்

அத்மியாஞ்சொப் - மனிதர்கள் எல்லோரும்.
மேரேபாஸ் - என்னிடம் (என்னை நாடி)
ஆஞசாஞ - வருவதும் போவதும்.
தேரா - உன்னுடைய.
கொத்பாமிஞ்சே - அருள்விலாசத்தின் மகிமையினுலே.
ஓஞ - நிகழவேண்டும்.
கோடேபர்க் - குதிரைமீது (மயிலைக் குதிரையாகக் கூறு வது மரபு.
கத்லம்பே - சவாரி செய்கிற.
பாலா - குழந்தைப் பெருமானே.
லடாய் - போர் புரிவதுபோல.
முர்கை பக்கரா சங்காத் - கோழியுடனும் ஆட்டுடனும்.
ஷோக் - லீலை (விளையாடல்) செய்கின்ற.
சோலா ரூப்வாலா - சோடச கலை வாய்ந்தவனே !
(சோடச கலை - முருகன் பதினறு அவதார பேத முடையவன். பதினறுடம்பன் என்று, சில நூல் விளம்ப நின்று, பலவாறிலங்கும் விந்தை - உடையோனே - திருப்புகழ். இவர், மயில்த்துக்குப் பாடியது)
பாத்சுன் - என் வார்த்தையைக் கேட்டருள்வாயாக.

பாடலுக்குப் பொருளெழுதியவர், சென்னை லிங்கி செட்டித் தெருவில் 272 எண், மேல் மாடி வீட்டில் வசித்த தி. அ. சாமிநாத ஐயர். 6-4-34ல் இருந்தபோதாகும். தி. மு. செ. சுவாமிகள்பால் மிக்க அன்புடையவர் ஆவர்.

குமரகுருபர சுவாமிகள், வடநாடுசென்று, இந்தி மொழியைக் கலைமகளருளால் உணர்ந்து, இஸ்லாமிய மன்னனை

ஆண்டனர், என்பது வரலாறு. கலைமகள் திருமகள் அருள் கைவந்தார்க்கு எம்மொழியும் இயல்பாய் அமையுமென்ற உண்மைக்கு, இந்தப் பாடல் இரண்டும் எடுத்துக் காட்டாகும். யாரிடத்தில் எப்போது இந்தி மொழி பயின்றார்கள் என்ற செய்தியே எவரிடமும் கேட்டதில்லை. வரலாற்றிலுமில்லை. ஒற்றெழுத்துக்குப் புள்ளியிடாமல் எழுதும் இவர், இப்பாடல்கட்கு மட்டும் கருத்து, யாப்பு எளிதிற்றெரியும் பொருட்டுப் புள்ளியிட்டெழுதியுள்ளார். எந்த மொழியில் வேண்டினும், வழிபடுகடவுளாகிய முருகப் பெருமானையே குறிக்கொண்டு, தன் கருத்தைக் கூறுதல் உபாசனை, வாய்மை யென்பதையறியலாம்.

## இந்நூலில் வந்த அன்பர்கள் பெயர்

தந்தை : செந்திநாயகம் பிள்ளை.
தாய் : பேச்சிமுத்தம்மாள்.
குரு : சீதாராம நாயுடு.
தம்பி : சித்திபுத்திர பிள்ளை.
மனைவி : சுந்தரத்தம்மாள்.
மகள் : ஈசுரவடிவம்மாள்.
மகன் : தி. மு. செந்திநாயக சுவாமிகள்.
மருகர் : சண்முகதாச பிள்ளை.
சீடர்கள் : அருணாசலத்தொண்டைமான், திருநெல்வேலி.
இராமானந்த சுவாமிகள், சிரவணபுரம்.
சின்னு ரெட்டியார், உரத்தூர்.
சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள், வடலூர்.
ஆறுமுக நாவலர், யாழ்ப்பாணம்.
இராம கிருஷ்ணப் பிள்ளை, கழுகுமலை.
கந்தசாமி சுவாமி, சோழவந்தான்.
கண்ணுவையர், புதுவை.
தானப்ப ஆசாரி, புதுவை.
சண்முக சுவாமிகள், குமாரபுரி.
மாம்பழக் கவிராயர், பழனி.

பாலசுப்பிரமணிய ஐயர், அட்டாவதானம் காரைக்குடி.
வேதாந்தம் கருப்பன் செட்டியார், தேவை.
வன்ரெண்டஞ் செட்டியார், தேவை.
மேலவீடு. சிதம்பரம் செட்டியார், தேவை.
அம்பலவாணசாமி, சிதம்பரம்.
அரங்கநாத முதலியார், பூண்டி.
பூவை. கலியாண சுந்தர முதலியார்.
அட்டாவதானம் சபாபதி முதலியார்.
காஞ்சிபுரம். சபாபதி முதலியார்.
காஞ்சி. நாகலிங்க முதலியார்.
கருப்ப வேலுக் கவுண்டர், பழனி.
கந்தசாமிப் புலவர், ஊற்றுமலை.
மல்லையர், வண்டிப் பாளையம்.
துரைசாமி ரெட்டியார், மதுரைப்பாக்கம்.
மருதப்பத் தேவர், வீரகேரளம்புதூர்
அரிகரபுத்திர முதலியார், திருவாமாத்தூர்.
அப்பாசாமி உபாத்தியாயர்—வளவனூர்

மற்றும் பலர் சந்திப்பு, சம்பாஷணை, நடைமுறைச் செயல், நகை, வியப்பு தரும் அரிய நிகழ்ச்சி. ஆதியவை பல உண்டு, கவிகளின் இயல்பு, அணி, ஆதியவும் பிறவும் விரிவானவரலாற்றில் காணலாம். இதிலும் ஆங்காங்கு அறிக.



